"நான் பெரிது நீ பெரிது என்று வாழாமல் நாடு பெரிதென்று வாழுங்கள்"



# ஈழநாதம்

மக்கள் நாளிதழ்

நாதம்:01 | திருவள்ளுவர் ஆண்டு: 2044 | 18-05-2013 | ஓசை:01



# முள்ளிவாய்க்காலின் பின்னரும் ஓயாத ஈழநாதம்

## * 1990ம் ஆண்டு முதல் ஈழநாதம்

ஈழநாதம் மக்கள் நாளிதழ் 1990 ஆம் ஆண்டு மாசி மாதம் 19 ஆம் திகதி யாழ்ப்பாணத்தில் ஆரம்பிக் கப்பட்டிருந்தது. ஈழநாதம் பத்திரிகை ஆரம்பிக்கப்பட்ட நாளி லிருந்து நாளாந்த பல நெருக்கடி களுக்கு மத்தியில் வெளிவந்து கொண்டிருந்த இப்பத்திரிகை இலங் கையில் நடை பெறும் பெரும் பாலான முக்கிய செய்திகளை வெளியிட்டு வந்த துடன் தமிழ் மக்கள் மீது சிறிலங்கா அரசால் மேற்கொள்ளப்பட்டு வந்த துன்பங் களையும் உலகிற்கு வெளிச் சமிட்டு காட்டிய பத்திரிகைக ளில் வடக்கின் முன்னணி நாளிதழாக இருந்தது. 1995 ஆம் ஆண்டு சிறி லங்கா படையினருக்கும் விடுதலைப் புலி களுக்குமிடையில் யுத்தத் தை அடுத்து யாழ்ப்பாணத்தில் இருந்து இடம்பெயர்ந்து சாவகச்சேரி கல்வயல் பகுதியில் இயங்கிவந்தது. பின்னர் கிளிநொச்சிக்கு இடம் பெயர்ந்திருந்த ஈழநாதம் தொடர்ச் சியாக வெளிவந்து கொண்டிருந்தது.

1996 ஆம் ஆண்டு கிளி நொச் சியை நோக்கிய சத்ஜெய இராணுவ நடவடி க்கையினால் ஈழநாதம் நி-றுவனம் பழைய முறிகண்டிப் பகுதிக்கும் பின்னர் கரிப்பட்ட முறிப்புக்கும் பின்னர் புதுக்குடியிருப் புமாக மாறி மாறி இடம் பெயர்ந்திருந்தது.

வன்னியின் நெருக்கடியான



தேசியத் தலைவருடன் ஈழநாதம் பிரதம ஆசிரியர் ஜெயராஜ் அவர்கள்

காலக் கட்டமான 1996-2002 வரைக் கும் அதாவது பிரதான கண்டிவீதி திறக்கும் வரைக்கும் வன் னிக்கட் டுப்பாட்டுப்பகுதியில் வெளி வந்த ஒரே ஒரு மக்கள் ஊடகங்களில் ஈழ நாதம் பத்திரிகையும் ஒன்றாகும்.

2002 ஆம் ஆண்டு புரிந்துணர்வு ஒப்பந்தத்தின் பின்னர் கிளிநொச்சி யில் இயங்கி வந்த இப்பத்திரிகை ஏனைய மாவட்டங்களிலும் வெளி வந்தது. அதாவது இராணு வக் கட்டுப்பாட்டுப்பகுதியான யாழ்ப் பாணம், வவுனியா, மன்னார் போன்ற மாவட்டங்களிலும் வெளி வந்திருந்தது.

இவ்வாறாக 2006 ஆம் ஆண்டு ஓகஸ்ட் 11 ஆம் திகதிப்பின்னர்

14ம் பக்கம் பார்க்க

மே 18






ஈழநாதம்
மக்கள் நாளிதழ்

# காமன்வெல்த்- மஹிந்த -இந்தியா ஆகியோரின் தூக்கு காவடி

கடந்த மாதம் பொது நலவாய நாடுகளின் வெளியுறவு அதிகாரிகள் சந்திப்பு லண்டனில் நடந்தது. இந்த சந்திப்பின் பின்னர் சிறிலங்கா மனித உரிமை ஆணைக்குழு உறுப்பினர்களுக்கும், பொது நலவாய நாடுகளின் செயலர் கமலேஸ் சர்மாவிற்கும் இடையே சந்திப்புக்கள் நடந்தது.

இந்த சந்திப்பில் பொது நலவாய மாநாட்டினை இலங்கையில் நடத்துவதற்கு தடையாக இருக்கும் அல்லது தடை விதிக்க கோருவோரின் காரணங்களை முறியடிக்கும் திட்டம் ஒன்று உருவாக்கப்பட்டது. இது இந்தியா மற்றும் மஹிந்த அரசின் கூட்டு திட்டமாகும். இந்த திட்டத்தினை சிறிலங்கா மனித உரிமை ஆணைக்குழுமூலம் நடைமுறைப்படுத்துவதன் மூலம் இந்தியாவும் இலங்கையும் இரு வேறு திட்டத்தினை நடைமுறைப்படுத்த முயற்சி செய்தது.

1. பொது நலவாய மா நாட்டினை சிறிலங்காவில் நடத்தலாம், அங்கு மனித உரிமை விடயங்களில் முன்னேற்றம் காணப்படுகின்றன . இலங்கை அரசு மனித உரிமை ஆர்வலர்களின் கருத்தினை செவிமடுக்கின்றது போன்றவற்றை நிரூபிப்பது.

2. ஐக்கிய நாடுகளின் தீர்மானங்களையும், அமெரிக்க தீர்மானங்களையும் புறந்தள்ளி,அமெரிக்கா அங்கம் வகிக்காத ஆனால் இந்தியாவால் ஆதிக்கம் செலுத்தக் கூடிய பொது நலவாய நாடுகளின் கீழ் மனித உரிமை தொடர்பான பயிற்சிகள் கண்காணிப்புக்களை மேற்கொள்வது. 9 இந்த விடயங்களைத்தான் நவனீதம் பிள்ளையும் வலியுறுத்தி மனித உரிமை பேரவையில் கடந்த ஆண்டும் இவ்வாண்டும் சில தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டமையும் குறிப்பிடலாம்.

ஆகவே மேல் குறித்த இரு திட்டங்களையும் நிறைவேரும் பொருட்டே இலங்கை மனித உரிமை ஆணைக்குழு எனும் மஹிந்த ராஜபக்வின் ஊதியத்தில் இயங்கும் மனித உரிமைவாதிகள் எனக் கூறிக்கொள்ளும் ஊழல் பெருச்சாளிகள் களத்தில் குதித்துள்ளனர்.. இதற்காக மஹிந்த ராஜபக்வும், இந்தியாவும் எவ்வளவு கொடுப்பனவுகள் வழங்கினார்களோ தெரியவில்லை.

நேர்மையான மனித உரிமைவாதிகள் மஹிந்த அரசால் தூக்கி எறியபப்ட்டு இருப்பார்கள் அல்லது அவர்களாகவே விலகியும் உள்ளார்கள் என்பது ஒருபுறம் இருக்கட்டும். ஆனால் இப்போது பொது நலவாய நாடுகளின் செயலகத்தின் கண்காணிப்பின் கீழ் சிறிலங்காவில் மனித உரிமைப் பணி என்ற கூத்தின் முகவுரையாக அவர்கள் வெளியிட்டுள்ள கருத்துக்களே அவர்களினால் அரங்கேற்றப்படவிருக்கின்ற நாடகத்தின் கருத்தினைப் பிரதிபலிக்கின்றது.

இலங்கையில் எதிர்வரும் நவம்பர் மாதம் நடக்கவுள்ள காமன்வெல்த் உச்சிமாநாட்டுக்கு முன்னதாகஇ அங்கு மனித உரிமைகளை மேம்படுத்துவது தொடர்பான செயல்நுட்ப உதவிகளை (Technical support) வழங்க காமன்வெல்த் செயலகம் முன்வந்துள்ளதாக இலங்கை மனித உரிமைகள் ஆணைக்குழு தெரிவித்துள்ளது.

மனித உரிமை மீறல்கள் தொடர்பான முறைப்பாடுகள் பற்றி தேசிய மட்டத்திலான விசாரணை நடத்துவது பற்றி காமன்வெல்த் செயலகத்தின் ஊடாக பல நாடுகளின் பிரதிநிதிகள் இலங்கை வரவுள்ளதாக மனித உரி மைகள் ஆணைக்குழுவின் ஆணையாளர் டாக்டர் பிரதீபா மஹநாம பிபிசி தமிழோசைக்கு அளித்த செவ்வியில் தெரிவித்துள்ளார்.

இதன்பொருட்டு, வட-அயர்லாந்து, கென்யா, உகாண்டா, சியேராலியோன் உள்ளிட்ட பல நாடுகளின் மனித உரிமை நிபுணர்கள் இலங்கை வந்து நல்லிணக்கம் மற்றும் மனித உரிமை மீறல்கள் பற்றிய தேசிய விசாரணை நடைமுறை தொடர்பில் பயிற்சிகளை வழங்குவார்கள் என்றும் டாக்டர் மஹநாம கூறினார்.

மஹிந்த ஊதியத்தின் கீழ் இயங்கும் இலங்கை மனித உரிமை ஆணையகத்தின் பணிப்பாளர் கூறிய கருத்துக்களைப் பாருங்கள்

1. இலங்கையில் கடந்த காலங்களுடன் ஒப்பிடும்போது மனித உரிமை மீறல்கள் தொடர்பான முறைப்பாடுகள் குறைந்துவருவதாகவும் அவர் தெரிவித்தார்.

2. வடக்கு கிழக்குப் பிரதேசங்களில் இராணுவத்தினருக்கு மனித உரி மைகள் பற்றி தெளிவூட்டும் வேலைகளும் பல வாரங்களாக நடந்துள்ளதாகவும் இலங்கை மனித உரிமைகள் ஆணையாளர் கூறினார். பயிற்சி கொடுப்பதனால் நடந்த மீறல்களுக்கு தீர்வு வருமா?

3. காமன்வெல்த் மாநாடு நடக்கவுள்ள இலங்கையின் மீதே அனைத்து தரப்பினரின் கவனமும் குவிந்துள்ளதாகவும் இலங்கையின் மனித உரிமைகள் தொடர்பில் குற்றஞ்சாட்டுவோர் இலங்கைக்கு வந்து நிலைமைகளை நேரில் பார்க்க வேண்டும் என்றும் அவர் மேலும் குறிப்பிட்டார். ஜவந்து பாருங்கள் எனக் கூறுவோர் ஏன் ஐக்கிய நாடுகளின் விசாரணையை அனுமதிக்கவில்லை.

4. காமன்வெல்த் செயலாளரும் செயலக அதிகாரிகளும் ஐநா மனித உரிமைகள் கவுன்சிலைப் போலல்லாது இலங்கையுடன் ஒத்துழைத்துச் செயற்படுகிறார்கள்' என்றும் பிரதீபா மஹநாம கூறினார். ஒத்துழைப்பு என்றால் மீறல்களை மறைப்பது என்றுதான் பொருள்போல் தெரிகின்றது.

மேற்கூறிய கருத்துக்கள் இலங்கை மனித உரிமை ஆணையகம் தன்னை முகத்திரையினை தானே கிழித்துக் காட்டுகின்றது அல்லவா !

இந்தியாவும் மஹிந்த அரசும் தமிழர்கள் மீதான இன அழிப்பு நடவடிக்கைகளை மூடி மறைக்க தம்மாலான அனைத்து முயற்சிகளையும் மேற்கொண்டுதான் வருகின்றது. ஆனாலும் உண்மைகள் உறங்குவதில்லை அவை அவ்வப்போது வெளிப்பட்டுக்கொண்டுதான் இருக்கின்றன. இப்போது இறுதி முயற்சியாக இலங்கை மனித உரிமை ஆணைக்குழுவினையே விலைக்கு வாங்கி தமது கபட நாடகத்தை அரங்கேற்றப் பார்க்கின்றது. இலங்கை மனித உரிமை ஆணைக்குழு என்ன ஐ. நா. மனித உரிமை பேரவையினையும் மஹிந்த அரசு வளைத்துப்போட்டாலும் ஆச்சரியம் அடைவதற்கு இல்லை. ஆனால் தமிழர் உணர்வுகளையும்இ தமிழர் போராட்டங்களையும் ஒட்டுமொத்தமாக யாரும் வாங்கிவிட முடியாது என்பது பேருண்மை.

2761 Markham Rd, Unit 18, Scarborough ON, Canada, M1X 1M4,
Tel: 647-783-3466, 647-656-2662, 91 9786987601
Email: eelanaatham@hotmail.com



எமது மக்கள் சுதந்திரமாகவும் கௌரவமாகவும், பாதுகாப்பாகவும் வாழவேண்டும் இந்த இலட்சியம் நிறைவேற வேண்டுமாயின் நாம் போராடியே ஆக வேண்டும்.

# வன்னி : ஓர் அவலம்!

கவனத்திலிருந்து
மறைக்கப்பட்ட
ஒரு சமுகத்தின்
வலிகளில் எழுப்பப்பட்ட
'போர் வெற்றியை கர்வப்படுத்தும்'
நினைவுச்சின்னங்களைத்தான்,
திரும்புகிற இடமெல்லாம்
பார்க்க முடிகிறது.

காதைப்பிளக்கும்
(இ)யந்திரசத்தத்தினூடே
உரசிச்செல்லும்
வாகன உ"ணம் ஒருபுறம்,
சுட்டெரிக்கும்
காபனீரொட்சைட் வாயு மறுபுறம்,
குமட்டல், வாந்தி, தலைவலியென
உடல் அசதியோடு,
தறப்பாள் கொட்டகைக்குள்
நாளும் கழிகிறது
நம் வாழ்வு.
சாலையின் இருமருங்கும்
வானுயர எழும்
விளம்பரப்பதாதைகள்
அளவுக்குக்கூட,
உயரவில்லை
நம் வாழ்க்கைத்தரம்!

கொட்டும் மழை பனி
சுட்டெரிக்கும் வெயில் நடுவே
கொட்டிக்கிடக்கும்
துன்பங்களோ கோடி!
வயிற்றுப்பசியோடும்
வாய்க்காலாய் ஓடும்
வியர்வையோடும்
விழித்திருந்து உழைத்தும்,
இன்னும்
உலை ஏறவில்லை
எனும்போது,
நெஞ்சில்
முள்ளே(ற்)றி வலிக்கிறது.

கல்லில் சிதறி
மடுவில் பாய்ந்து
குன்றுகள் மேவி
ஆகமொத்தத்தில்,
'நதி ஒன்று கடலில்
சங்கமித்த மனநிறைவு'
எப்போதுதான்
வந்து சேரப்போகிறது
நமக்கு.

இதற்கெல்லாம்
கொடுக்க வேண்டிய அக்கறைகள்
மேற்கொள்ள வேண்டிய
மீட்பு முயற்சிகளை விடுத்து,
இப்போதும்
சுற்றுலா நோக்கோடுதான்
வந்து போகிறார்கள்.
தமிழர் நம்மை
காட்சிப்பொருள்களாக
வேடிக்கைப்பார்த்துத்திரும்புகிறார்கள்.

பக்கத்து வீட்டில்
இழவு விழுகின்றபோது,
தனி ஒரு மனிதனின்
பிறப்பு கொண்டாடப்படும்
தகுதியை இழப்பதுதான்
உலக வழக்கம்.
மாறாக,
இங்கெல்லாம்
நரபலி எடுக்கப்பட்ட தமிழரின்
இரத்தத்தில்
கண்ணீரில்,
போர் வெற்றி விழா
களியாட்டங்களை
நடத்துகிறார்கள்.
கேளிக்கை நிகழ்ச்சிகளில்
களித்திருக்கிறார்கள்.

'பண்பற்றவர்
புண்பட்டவரே,
புண்பட்டவர் நாம்
பண்பற்றவரல்லர்!'

முட்கள் நிறைந்த
பாதைகளில்
நம் கால்கள்
பயணித்திருக்கின்றன.
இப்போதும்
பயணித்துக்கொண்டிருக்கின்றன.
பாதங்களுக்கு நீங்கள்
மருந்திட வேண்டாம்.
குறைந்தபட்சம்
அதன் வலிகளையாவது
உணரலாமல்லவா?

-முல்லைத்தீவிலிருந்து... அ. ஈழம் சேகுவேரா-



பகுதி 1

# போராட்டப்பாதையில் புகுந்தபுலிகளும், விழுந்த துரையப்பாவும்

**–வருணகுலத்தான் பார்வையில்–**

1975 சித்திரைமாத முதல்வாரத்தில் தான் முன்னெப்பொழுதும் பழகி இருக்காத நாதன் தன்னைத்தேடி தங்களுடைய தெணியம்பை வீட்டிற்கு வந்ததும் தனதுகையில் வைத்திருந்த சிறுகடதாசித்துண்டில் இருந்தபெயரை கவனமாக வாசித்து தன்னை அழைத்ததும்



கலாபதிக்கு ஆச்சரியமாக இருந்தது. ஏனெனில் இவ்வாறு பெயரை எழுதிவந்து வாசிப்பதென்பது வல்வெட்டித்துறையில் என்றுமே வழக்கமாக இருந்ததில்லை. காரணம் அந்தஊரில் எல்லோரும் எல்லோருக்கும் தெரிந்தவர்கள் என்பதனைவிட எல்லோரும் எல்லோருக்கும் உறவினர்கள் என்பதே சரியானதாகும்.

இந்நிலையில் அயற்கிராமத்தைச்சேர்ந்த நாதன் பெயரை எழுதிக்கொண்டு வந்து தன்னை அழைத்தது கலாபதி எதிர்பாராத ஒன்றே! நல்லவேளை நாதன் பெயரை எழுதிக்கொண்டு வரும்வேளையில் கலாபதி வீட்டுவாசலிலேயே நின்றிருந்தமையால் எவ்வித ஆள்மாறாட்டமுமின்றி இருவரும் சந்தித்துக்கொண்டனர்.

நாதன் கூறியசெய்தியோ மீண்டும் ஆச்சரியத்தை அல்ல பேராச்சரியத்தையே கலாபதிக்கு கொடுத்தது. காரணம் தங்களைக் கையுடன் கூட்டிவரச் சொன்னநபர் 'பிரபாகரன்' என்பதைக் கேட்டால் யாருக்குத்தான் ஆச்சரியமாக அமையாதுவிடும். ஆம் இன்றுமட்டுமல்ல அன்றும்கூட அவரைத் தெரியாதவர்களிற்கு சாதாரண இளைஞராக காட்சியளித்த தேசியத்தலைவருடைய செயல்கள் அவரைத் தெரிந்த ஊரவர்களிற்கும் உறவினர்களிற்கும் அசாதரண மாகவும் வியப்பிற்கு உரியதாகவும் அமைந்திருந்தன.

1970 னி 1972 காலப்பகுதிகளில் சிங்களஇனவெறி அரசிற்கெதிராக கொடும்பாவி பஸ்எரிப்பு குண்டுவீச்சு எனப்பல தீவிரவாதச்சம்பவங்களில் ஈடுபட்டு இறுதியாக வல்வெட்டித்துறை நெற்கொழுவில் நடந்த கைக்குண்டுத் தயாரிப்பு விபத்தில் முடியவே படுகாயமடைந்தநிலையில் பொலிசாரின் சுற்றிவளைப்பில் இருந்து தப்பித்து இந்தியாவிற்குச்சென்ற சின்னச்சோதி நடேசுதாசன் மற்றும் குட்டிமணி தங்கத்துரை என்னும் தன்னைவிட வயதில் கூடிய போராளிகளுடன் இணைந்து செயற்பட்டவர் பிரபாகரன் என்பதும் அவ்வாறு மூத்தோருடன் இணைந்து செயல்ப்பட்டதால் 'தம்பி' என்ற அழைபெயரால் வல்வெட்டித்துறை சமூகத்தில் அன்புடன் இவர் அழைக்கப்பட்டதும் கலாபதிக்கு தெரிந்ததே! இதனைவிட காயமடைந்தவர்கள் தப்பிச்செல்வதற்கு கலாபதியுடைய உறவினரான சித்திரம் என்பவரே படகினை ஏற்பாடுசெய்ததும் கலாபதியுடைய மூத்தசகோதரன் சிறிபதியும் இந்த ஏற்பாட்டு முயற்சியில் ஈடுபட்டதும் கலாபதிக்கு நன்குதெரிந்தே இருந்தது..1972 அக்டோபர் 05இல் நடந்த இக்குண்டு வெடிப்பின் பின் கடந்த இரண்டு வருடங்க ளிற்கு மேலாக இக்குழுவில் இருந்த குட்டிமணியைத்தவிர வேறுயாரையும் ஊர்ப்பக்கங்களில் அதிகமாக காணமுடிவதில்லை. இதன்தொடராக சில காலங் களின் முன்பு டைனமெற் என்ற வெடிபொருளை வெடிக்கச்செய்யும் கெற்பு எனும் பொருளினை கடல்மார்க்கமாக கொண்டு வரும்பொழுது அவை எதிர்பாராமல் இலங்கை கடற்படையினரிடம் சிக்கியது. இதனைத் தொடர்ந்த விசார ணைகளின் பின்பு இந்தியஇலங்கைப் பொலி சாரினால் திருச்சியில் கைதுசெய்யப்பட்ட குட்டிமணி கொழும்பிற்கு கொண்டுவரப்பட்டு தென்னிலங்கையின் ஏதே ஒரு சிறைச்சாலையில் தடுத்து வைக்கப்பட்டிருப்பதையும் கலாபதி அறிந்தே இருந்தார்.

இந்நிலையில் இத்தீவிரவாதக் குழுவைச் சேர்ந்த பிரபாகரன் தன்னையும் தனதுநண் பனையும் அழைத்துவரச் சொன்னதாக அறிந்தால் யாருக்குத்தான் ஆச்சரியமாக இருக்காது! எனினும் பிரபாகரன் அழைத்து வரச்சொன்னதாக நாதன் சொன்னதும் ஏன்? என விளக்கம் கேட்காமலேயே நாதன் எழுதிக்கொண்டு வந்த அடுத்த பெயருக்குரிய நண்பனின் வீட்டிற்குச் சென்று அவனையும் அழைத்தனர். குறிக்கப்படும் இந்நண்பன் சிலகாலத்திற்கு முன்பு மேற் குறிப்பிட்ட போராளிகளால் இந்தியாவின் வேதாரணியத்தில் அமைக்கப்பட்டிருந்த தளத்திற்கு சென்று 'தம்பி'பிரபாகரன் உட்பட அனைவரையும் சந்தித்து திரும்பியிருந்தார். இப்போது மூவரும் கதைத்துக்கொண்டு பிரபாகரனை சந்திக்கச் சென்றனர். பிரபாகரனும் கலாபதியும் 1968இல் பொன்னம்பலம் மாஸ்டர் வீட்டில் ஒன்றாகப்படிக்கும் காலத்திலேயே அறிமுகமானவர்கள் என்பதால் கலாபதிக்கு பிரபாகரன் புதியவர் அல்ல என்பது இங்கே குறிப்பிடத்தக்கது.

நெற்கொழு வைரவர்கோவில்வரை இவர்கள் நடந்துவரும் பொழுது அங்கி ருந்த வாசிகசாலையில் தமக்காக பிர பாகரன் காத்துநிற்பதைக் கண்டனர். இவர் களைக்கண்டதும் வெளியேவந்த பிரபாகரனும் இவர்களுடன் இணைந்து கொண்டார். நண்பகலான அவ்வேளையில் தனது கடமை முடிந்தது என நாதன் இவர்களைவிட்டு பிரிந்துசென்றார். அருகிலிருந்த மைதானம்வரை தொடர்ந்து நடந்துவந்த மூவரும் அங்கிருந்த புல்வெளியில் அமர்ந்து கொண்டனர். நடந் துவந்த களைப்புத்தீர இவர்கள் தம்மை ஆசுவாசப்படுத்திக் கொள்ளவும் பிரபாகரன் தான் இவர்களை அழைத்தகாரணத்தை கூறத் தொடங்கினார்.

இரண்டுவருடங்கள் தமிழ்நாட்டில் பெரியசோதி தங்கத்துரை சின்னச்சோதி நடேசுதாசன் எனும் முன்னோடிகளுடன இருந்துவிட்டு தான் இப்பொழுது தனியாகவே ஊருக்கு வந்துள்ளதாகவும் அவர்கள் காலம்கனியட்டும் என காத்திருப்பது போல் தோன்றுவதால் இவ்வாறான முடிவிற்கு தான் வந்துள்ளதையும் நியாயப்படுத்திய அவர் ஓய்வின்றி எதையாவது செய்ய வேண்டுமென்ற தனது ஆவலையும் வெளிப்படுத்தினார். 1974ஆம் ஆண்டில் கலாபதியும் அவர் குழுவினரும் மேற்கொண்ட தீவிரவாத முயற்சிகளைக்கேள்விப்பட்டே அவர்களினைத்தான் சந்திக்கவிரும்பிய காரணம் என்பதையும் விளக்கமாக கூறினார். தொடர்ந்து இனத்தின் அடிப்படையில் தேவையின்றி அப்பாவிமக்களை அநாவசியமாக தாக்கும் அரசபடைகளிற்கு எதிராக எதையாவது செய்ய வேண்டுமெனவும் அதற்காக அவர்களை தன்னுடன் இணைந்து பணியாற்றவேண்டும் எனவும் கேட்டுக்கொண்டார்.

1967இல் வல்வெட்டித்துறை சந்தியில் அரசபடைகள் பொதுமக்களிற்கு எதிராக தாக்குதலைநடத்தியது. அத்தாக்குதலில் அப்பாவியான சிவஞானசுந்தரம் கொல்லப்பட்டார். இதுபோன்ற மிலேச்சத்தனமான தேவையற்ற தாக்குதல்களை கண்டும் கேள்விப்பட்டும் சிறுவனானபிரபாகரன் வேதனை யுற்றார். இதனால் தாக்கப்படும் மக்களிற்காக வேதனைப்பட்ட இவர் சிங்களப்படைகளின் மீது வெறுப்புக்கொண்டார்.

1968இல் தனது பதின்நான்கு வயதில் இருந்தே தீவிரவாதபோராட்ட உணர் வுடன் செயற்பட்டவர் பிர பாகரன். சிறுவயதிலிருந்தே மாயாவியின் சாகஸக்கதைகளைப் படிப்பதிலும் அவற்றைசேகரிப்பதிலும் பெருவிருப்பம் கொண்டி ருந்தார். அதற்கேற்றாப்போல் அக்காலத்தில் கெற்றப்போல் சகிதம் எந்நேரமும் உலாவரும் இவர் தனது பாடசாலைத்தோழர்களுடன் ஒருகுழுவை அமைத்து அதற்கு 'காட்டுஎல்லைப்படை' என பெயரும் சூட்டியிருந்தார். (தகவல் சுரேஸ்குமார்) அதேநேரத்தில் தனதுவீட்டிற்கு அருகாமையில் விளாம்பத்தை காணியுடன் அமைந்திருந்த இடிந்து சிதிலமான ஓதுவார் வீட்டினுள் தன்னைவிட மூத்தவர்களான நடேசுதாசன் ஜெயபால் பாலி மோகன் என்பவர்களுடன் இணைந்து பெற்றோல்க்குண்டுகள் மற்றும் கைக்குண்டுகள் தயாரிப்பதில் ஈடுபட்டார். (காலநதிக்கரையில் மீளநினைக்கின்றேன். 1994



ஏப்ரல் மேமாத வெளிச்சம் இதழ்)

1969களில் வேணுகோபால்ஆசிரியர் ஊட்டிய தமிழரின்சுயாட்சிக் கொள்கையினால் உந்தப்பட்டு அவருடன்திரிந்தார். அதேவேளை தனது பாடசாலைத் தோழர்களான சுரேஸ்குமார் குமாரதேவன் என்பவர்களுடன் இணைந்து நெற்கொழு கோழிப் பண்ணையில் சின்னச்சோதியிடம் உடற்பயிற்சி மற்றும் சைனாபுட்டிங் என அழைக்கப்பட்ட சீன தற்பாதுகாப்பு முறைகளையும் பயின்றுகெண்டார்.

1970டிசம்பரில் கபொத சாதாரணபரீட்சைக்கு முதன்முதலாக தேற்றியஅவர் பரீட்சைக்கு முன்பாகவே தமிழ்மாணவர்பேரவையுடன் தன்னை இணைத்துக் கொண்டிருந்தார்.

1971ஜனவரிமாதத்தில் வல்வெட்டித்துறை வேம்படியில் அன்றைய கல்வி அமைச்சர் பதியுதீன் முகமட்டின் வருகையை எதிர்த்து பதியுதீன் உடைய கொடும்பாவி கட்டியதுடன் போராட்டப்பாதையில் நேரடியாக களம் இறங்கினார். இவ்வேளையில் இனஉணர்வில் வல்வெட்டித்துறையில் ஒன்றிணைக்கப்பட்ட தமிழர்கூட்டணியின் செயற்பாடுகளில் ஆர்வத்துடன் ஈடுபட்டார். மார்ச் மாத முதல்வாரத்தில் வல்வெட்டித்துறையில் நடந்த ஆபெரேரா வருகைக்கெதிரான புறக்கணிப்புப் போரில் முன்னின்றார்.

1972ஆரம்பம்முதலே மாணவர்பேரவை மற்றும் தமிழர்கூட்டணியின் போராட்டப் பாதையில் தனது தீவிரப்போக்கை வளர்த்துக் கொண்டதுடன் குடியரசு அரசியல்யாப்பிற்கு

6ம் பக்கம் பார்க்க

'வருணகுலத்தான் பார்வையில்' தொடரும் இக்கட்டுரைகள் சம்பந்தப்பட்டவர்களின் நேரடி வாக்குமூலங்களினால் படைக்கப்பட்டதுடன், 2002ல் தலைவரின் பார்வைக்கு சமர்ப்பிக்கப்பட்டு அனுமதி பெறப்பட்டவையாகும்.

# ஈழநாதம் ஏட்டிற்கு எனது வாழ்த்துக்கள்!



மக்களாட்சியைத் தாங்கிக் கொண்டிருக்கும் நான்கு தூண்களில் ஊடகம் நான்காவது தூணாகப் பார்க்கப்படுகிறது. ஏனையவை நாடாளுமன்றம், நிருவாக சேவை, நீதித்துறை ஆகியனவாகும். ஊடகங்களின் செல்வாக்குக்குக் காரணம் மனிதர்களது மனங்களை அவை தம் வசப்படுத்துகின்றன. ஆளுவோருக்கும் பொதுமக்களுக்கும் இடையில் அவை ஒரு பாலமாக செயல்படுகின்றன. ஊடகங்கள் இல்லாமல் நாடாளுமன்றம் இயற்றும் சட்டங்கள் அவற்றின் நேர்மறை, எதிர்மறை பற்றி அறிய வாய்ப்பில்லாது போய்விடும்.

ஊடகங்கள் கண்மூடி மவுனியாகி விட்டால் அரசாள்வோரின் குறை நிறை தெரிய வாய்ப்பில்லை.

ஊடகங்கள் மக்களாட்சியின் நலத்துக்கு இன்றியமையாதவை. நாட்டின் நல்லாட்சிக்கு முதுகெலும்பு போன்றவை.

உலகில் நடைபெறும் நல்லது கெட்டது செய்திகளை மக்களது கவனத்துக்கு எடுத்துச் செல்கின்றன. அது அரசியலாக இருக்கலாம். பொருளியலாக இருக்கலாம் அல்லது சமூக சிக்கல்களாக இருக்கலாம்.

தேர்தல் காலத்தில் செய்தித்தாள்கள், வானொலி, தொலைக்காட்சி மற்றும் இணைய தளங்கள் முக்கிய பங்கு வகிக்கின்றன. அரசியல் கட்சிகள் தங்கள் கொள்கை கோட்பாடுகளை விளக்க ஊடகங்கள் மேடை அமைத்துக் கொடுக்கின்றன.

தமிழ் மக்கள் இழந்த உரிமைகளை வென்றெடுப்பதில் ஊடகங்களது பங்களிப்பு முக்கியமானது. சிறீலங்காவுக்கு உள்ள ஊடக பலம் தமிழர் தரப்புக்கு இல்லை. குறிப்பாக ஆங்கில ஊடக பலம் தமிழர் தரப்புக்கு அடியோடு இல்லை. கொழும்பில் வெளியாகும் ஆங்கில நாளேடுகள் ஒன்றுதானும் தமிழர்களால் வெளியிடப்படுவதில்லை.

கடந்த காலங்களில் தமிழ்நாதம் தமிழ்மக்களின் உரிமைக் குரலாக ஒலித்தது யாவரும் அறிந்ததே. அது சில ஆண்டு இடைவெளிக்குப் பின்னர் மீண்டும் வெளிவருவதில் மெத்த மகிழ்ச்சி அடைகிறேன்.

தமிழர் தரப்பில் உள்ள நியாயங்களை எமது கோரிக்கைகளில் உள்ள நீதியை தமிழ்நாதம் முன்புபோல் முன்னெடுக்கும் என நம்புகிறேன். அதே சமயம் சிறிலங்காவின் கொடிய ஆட்சியில் அல்லல் படும் அவலப்படும் அடக்கப்படும் ஒடுக்கப்படும் எமது உறவுகளின் விடிவுக்காக, அவர்களது அடிப்படை வாழ்வுரிமைக்காகப் புலத்தில் நின்று கொண்டு குரல் எழுப்ப வேண்டும்.

ஏடு நடத்துவது எளிதான பணி அல்ல. பல ஏடுகள் போதிய விளம்பர ஆதரவு இல்லாமல் தோன்றி மறைகின்றன. ஈழநாதம் நன்கு திட்டமிட்ட பின்னர் வெளிவருகிறது என நம்புகிறேன்.

ஈழநாதம் ஏட்டிற்கு எனது வாழ்த்துக்கள்!
நக்கீரன்
தலைவர்
தமிழ்ப் படைப்பாளிகள் கழகம்

தமிழ்ப் படைப்பாளிகள் கழகம்








வைகோ, கௌத்தூர் மணி, பழ.நெடுமாறன், காசி ஆனத்தன், சீமான், திருமாவளவன் ஆகியோர் ஈழநாதம் பத்திரிகைக்கு வாழ்த்து செய்தியை தெரிவித்தனர்.

# முள்ளிவாய்க்கால் ஒரு தொடர்கதை..

முள்ளிவாய்க்கால் அது தமிழினத்தால் மறக்க முடியாத துயரங்களும் துன்பங்களும் நிகழ்ந்தேறிய நாள். அது உரிமைக்காக போராட ஆயுதம் ஏந்தியவர்களின் உடைகள் உருவப்பட்ட



நாள். கழுத்தில் நகைகள் மட்டும் மல்ல நாங்கள் குப்பிகளும் அணிவோம் என இந்த உலகுக்கு எடுத்து காட்டிய வீரத்தமிழிச்சிகளின் உடல்கள் சிதைக்கப்பட்ட நாள். பிள்ளை தந்தையை இழந்த நாள், தாய் பிள்ளையை இழந்த நாள், மனைவி கணவனை இழந்த நாள். மொத்தமாக தமிழன் தன் மண்ணை முற்றாக இழந்த நாள் இந்த முள்ளிவாய்க்கால் மே 18 உடன் முடிந்து போயி விடவில்லை அது இன்றும் தொடர்ந்து கொண்டு தான் இருக்கிறது அமைதியான முறையில. சத்தங்கள் இன்றி தொடர்கின்றது. அது எவருக்கும் தெரியாத வகையில் சிறப்பாக நடந்து கொண்டுதான் இருக்கிறது.

ஈழத்தமிழர்களாகிய எங்களுடைய வாய்கள் மூடப்பட்டிருக்கிறது. ஐநா ஐம் புலன்களையும் மூடிக்கொண்டிருக்கிறது. ஏன் என்று கேள்வி கேட்டால் ஈழத்தமிழர்களாகிய நாங்கள் என்ன சொல்வது. எங்களுக்கு நீங்கள் வீடுகட்டி தருகிறீர்களே நீங்கள் எங்களுக்கு ஆறுதலாக ஒரு வார்த்தை சொன்னீர்களா. அதற்கு பதிலாக நிங்கள் என்ன சொல்கிறீர்கள்.

அனுபவித்த நானே சொல்கிறேன் அந்த கதையை ஒரு நாள் காலை யாழ் பாணத்தில் உள்ள ஐநா அலுவலகத்துக்கு என்னுடைய உறவினர் ஒருவர் காணமல் போன ஒருவர் பற்றி கேட்டனர் அப்போது அவர்கள் கூறிய பதில் எங்களிடம் கூறிவிட்டா சென்றார் அப்ப சிறீ லங்கா அரசாங்கம் உங்களிடம் கேட்டு விட்டுதான் கொன்றதா இப்படி உலக மக்களை காக்கும் ஐநா. இப்படி இருக்க மக்கள் அணு-வணுவாக செத்துக் கொண்டிருக்கிறார்கள். இதை காப்பாற்ற தற்சமயம் புலம் பெயர்மக்களால் மட்டுமே முடியும் அதற்காக புலம் பெயர்தமிழர்கள் ஒரு தேசிய இனமாக ஒன்றுபட்டால் மட்டுமே முடியும்.

முள்ளிவாய்கால் தினமாகிய மே 18ல் நியூ ஜிலாண்டு , மலேசியா, தமிழ்நாடு ,மௌரிச-ியஸ், தென் ஆபிரிக்கா ஐரோப்பா, கனடா வரை முள்ளிவாய்காலில் நடந்தது இனப்படுகொலை என்று தமிழின அழிப்பு நாளை நினைவு கொள்கிறார்கள்.

சிறி லங்காவில் ஒருபக்கம் வெற்றி விழா கொண்டா, மறுபக்கம் தமிழ் மக்கள் பகுதிகளில் உயிரிழந்த எங்கள் உறவுகளுக்கு, அவர்கள் இறந்த இடத்தில் நின்று அவர்கள் நினைவு நாளை செய்ய முடியாவிட்டாலும், உலகம் முழுவதும் தமிழ் மக்கள் இந்த நாளை மே 18 என்ற அந்த நாளிலேயே செய்வது எங்களுக்கு ஆறுதல் அளிக்கிறது.

**முள்ளிவாய்கால் நினைவு நாள் மே 17 அல்ல.**

மே 19, முள்ளிவாய்கால் முடிவல்ல, மீண்டும் எழுவோம், போராட்டம் தொடரும் என்று அறை கூவும் நாள், அந்த நாளை தமிழக உறவுகளும், கனடா உறவுகளும் போராட்ட வலுவுடன் உலகுக்கு எடுத்து சொல்கிறார்கள். முள்ளிவாய்கால் 'தமிழன்' விடுதலை அடைய வேண்டும் என்ற உணர்வை உலகத் தமிழனுக்கு உணர்த்திய நாள். தமிழீழம் பிறக்கும்.

-ஈழவன்-

# ஏத்தனை முள்ளிவாய்க்கால்கள்

## இடம்பெற்றாலும் நம்பிக்கையை நாம் இழக்கக் கூடாது!

“மனிதன் அப்பத்தை மட்டும் உண்டு வாழமுடியாது” என்பது கிறித்துவ திருமுறையில் சொல்லப்பட்டுள்ள வாசகம். அப்பம் என்பது மனிதனுக்கு வேண்டிய அடிப்படைத் தேவைகளைக் குறிக்கிறது. மனிதன் வாழ்வதற்கு உண்ண உணவு, உடுக்க உடை மற்றும் படுத்துறங்க உறையுள் தேவைப்படுகிறது.



ஆனால் வாழ்வதற்கு இவை மட்டும் போதாது. அவற்றுக்கும் மேலாக அவனுக்கு வாழ்வுரிமை, சுதந்திரம் மற்றும் இன்பத்திற்கான முயற்சிகளில் ஈடுபடும் உரிமைகள் தேவைப்படுகின்றன. இதனை ஆங்கிலத்தில் Life, Liberty and the pursuit of Happiness எனச் சொல்வார்கள். இந்த உரிமைகள் இல்லாவிட்டால் மானிடன் மகிழச்சியாக இருப்பதில்லை. அப்பம் இருந்தும் ஏனைய தேவைகள் இல்லாவிட்டால் மனிதன் சாவதற்கு விருப்பப்படுகிறான்.

விலங்குகளுக்கும் மனிதனுக்குத் தேவைப்படுவதுபோல் அடிப்படைத் தேவைகள் தேவைப்படுகின்றன. ஆனால் விலங்குகளுக்கு எதையும் ஆராய்ந்து பார்க்கும் அறிவு இல்லை. தீமை, நன்மை இவற்றைப் பாகுபடுத்திப் பார்க்கும் திறன் இல்லை.

மனிதன் எங்கு வாழ்ந்தாலும் சுதந்திரமாக வாழ ஆசைப்படுகிறான். தானே தனது தலைவிதியை தீர்மானிக்கிறவனாக இருக்க விரும்புகிறான். வரலாற்றுக் காலம் தொடக்கம் சுதந்திரம் தனது பிறப்புரிமை எனக் கருதுகிறான். பேச்சுச் சுதந்திரம், எழுத்துச் சுதந்திரம், கருத்துச் சுதந்திரம், தான் விரும்பிய இடத்துக்குச் செல்லும் சுதந்திரம் இருக்க வேண்டும் என்று அசைப்படுகிறான்.

அரசு என்பது மக்களது சம்மதத்தோடு இருக்க வேண்டும். குடிமக்களது உரிமைகளை அரசுகள் பறிக்கும் போது போர் வெடிக்கிறது. அது அகிம்சை வழியிலும் இருக்கலாம். ஆயுதப் போராட்டமாகவும் இருக்கலாம்.

வரலாற்றில் சுதந்திரத்துக்காக மக்கள் நடத்திய போராட்டங்கள் ஏராளம். போராட்டங்களைத் தொடர்ந்து ஒரு தலைப்பட்சமான சுதந்திரப் பிரகடனங்கள் வெளியிடப்பட்டன.

1320 இல் ஸ்கொட்லாந்து இங்கிலாந்து அரசரான முதலாம் என்வேர்ட்டின் தாக்குதல்களில் இருந்து தற்காத்துக் கொள்ள சுதந்திரப் பிரகடனத்தை வெளியிட்டது.

1811 இல் பராக்குவே, இசுபானியா நாட்டில் இருந்து பிரிந்து போக ஒரு தலைப் பட்சமான சுதந்திரப் பிரகடனத்தை அறிவித்தது.

1816 யூலை 9 ஆம் நாள் ஆர்ஜெந்தினா சுதந்திரப் பிரகடனம் செய்தது. ஆர்ஜெந்தினா சுதந்திரப் பிரகடனத்தை 9 ஆண்டுகள் கழித்து 1825 இல் பிரித்தானியா அதிகார பூர்வமாக அங்கீகரித்தது.

1822 ஆம் ஆண்டு போர்ச்சுகலின் ஆதிக்கத்திலிருந்த பிரேசில் தனது சுதந்திரப் பிரகடனத்தை வெளியிட்டது.

1825 ஆம் ஆண்டு பொலிவியா தனது சுதந்திரப் பிரகடனத்தை தானே அறிவித்தது.

1828 ஆம் ஆண்டு ஆர்ஜெந்தினா - பிரேசில் போருக்குப் பின்னர் உருகுவேயும் தன்னை சுதந்திர நாடாகப் பிரகடனம் செய்தது.

அய்க்கிய அமெரிக்க நாடுகள் உருவானதைத் தொடர்ந்து 1823 ஆம் ஆண்டு மத்திய அமெரிக்க நாடுகளின் கூட்டமைப்பு ஒன்று



உருவாக்கப் பட்டது. இக்கூட்டமைப்பில் கோஸ்ராரிக்கா, எல் சல்வடோர், கௌதமாலா, ஹோண்டுரா, நிக்கரகுவா ஆகிய நாடுகள் உறுப்பு நாடுகளாக இருந்தன. ஆனால் இக்கூட்டமைப்பிலிருந்து,

1838 ஆம் ஆண்டில் நிக்கரகுவா மத்திய அமெரிக்க நாடுகளின் கூட்டமைப்பில் இருந்து பிரிந்து செல்வதாக அறிவித்தது. அதனைத் தொடர்ந்து ஹோண்டுராஸ் மற்றும் கோஸ்ராரிக்கா ஆகிய நாடுகளும் பிரிந்து சென்றன.

-நக்கீரன்-

இதனால் மத்திய அமெரிக்க நாடுகளின் கூட்டமைப்பு 1840 ஆம் ஆண்டு கலைக்கப்பட்டது.

1841 இல் எல்சவடோவர் நாடு தன்னை தானே சுதந்திர நாடாக அறிவித்துக் கொண்டது.

1928 இல் எஸ்தோனியா சுதந்திரப் பிரகடனம் செய்தது. ஆனால் 1940 இல் அந்த நாடு சோவியத் உருசியாவால் ஆக்கிரமிக்கப்பட்டது. 1990 களில் சோவியத் ஒன்றியம் உடைந்து நொருங்கிய போது எஸ்தோனியா மீண்டும் தன்னை ஒரு சுதந்திர நாடாக அறிவித்தது.

1917 இல் உருசியப் புரட்சியைத் தொடர்ந்து பின்லாந்து தனது சுதந்திரப் பிரகடனத்தை வெளியிட்டது. அப்பிரகடனத்தை சோவியத்தின் உயர் நிர்வாக அமைப்பும் ஜெர்மனியும் ஸ்காண்டிநேவியன் நாடுகளும் டிசம்பர் 22 ஆம் நாளே அங்கீகரித்தன.

1973 இல் கினியா பிசாவு ஒருதலைபட்சமான சுதந்திரப் பிரகடனத்தை வெளியிட்டது.

1805 இல் பிரெஞ்சு காலனியின் கீழ் இருந்த ஹைட்டி தனது சுதந்திரப் பிரகடனத்தை தானே வெளியிட்டது. இலத்தீன் அமெரிக்க நாடுகளிலேயே முதலாவது நாடாக சுதந்திரத்தைப் பிரகடனம் செய்த நாடு ஹைட்டி. ஆனால், 1915 ஆம் ஆண்டு முதல் 1934 ஆம் ஆண்டு வரை சுதந்திர நாடாக இருந்த ஹைட்டியை ஆக்கிரமித்து அமெரிக்கா அரசாட்சி செய்தது. அதன் பின்னர் சுதந்திர நாடாக இயங்கி வருகிறது.

1945 இல் இந்தோனேசியாவின் தேசியவாதத் தலைவர் சுகர்னோ சுதந்திரப் பிரகடனத்தை அறிவித்தார். அரச தலைவரானார். அமெரிக்காவின் சுதந்திரப் பிரகடன பாணியில் ஒரு பிரகடனம் வெளியிடப்பட்டது.

1949 இல் இரண்டாம் உலகப் போரில் யப்பான் சரணடைந்த இரண்டே நாள்களில் இந்தோனேசியா சுதந்திரப் பிரகடனம் செய்தது. அதற்கு முன்னர் இந்தோனேசியாவை நெதர்லாந்து ஆக்கிரமித்து தனது காலனி நாடாக வைத்திருந்தது.

1990 களில் சோவியத் ஒன்றியம் உடைந்த போது அதில் இருந்த 15 நாடுகள் தனிநாடுகளாகத் தம்மைப் பிரகடனப்படுத்தின. 1991 டிசெம்பர் 26 இல் சோவியத் ஒன்றியத்தை கலைக்கும் பிரகடனம் வெளியிடப்பட்டது. அதன் மூலம் சோவியத் ஒன்றியத்தினால் உருவாக்கப்பட்ட உருசியா உட்பட 12 நாடுகளின் சுதந்திரம் ஒத்துக்கொள்ளப்பட்டது. லத்வியா, எஸ்தோனியா மற்றும் லிஸ்துனியா ஆகிய 3 நாடுகளும் அதற்கு முன்னரே சுதந்திரப் பிரகடனம் செய்துவிட்டன. உருசியா, யோர்ஜியா, உக்ரேன், ஆர்மீனியா, அசெபர்ஜான், பெலாறஸ், காஸ்கஸ்தான், கைறிஜிந்தான், மொல்டேவா, ரஜிஸ்கிஸ்தான், தேக்மெனிஸ்தான், உஸ்பெகிஸ்தான் ஆகிய நாடுகளே பிரிந்துபோன நாடுகள் ஆகும்.

1990களில் சோவியத் ஒன்றியம் உடைந்த போது யூகோசிலேவியா குடியரசும் சீர்குலைந்து ஏழு நாடுகளாக உருவெடுத்தன. சேர்பியா, மொன்ரோநீக்றோ, மசிடோனியா, பொஸ்னியா, குரோசியா, ஸ்லோவேனியா, கொசோவோ ஆகிய நாடுகளே அவையாகும்.

கொலனித்துவ ஆட்சியில் இருந்து விடுபட்டு சுதந்திரம் அடைந்த நாடுகள் பலவாகும். இந்தியா, பர்மா, இந்தோனிசியா, பிலிப்பைன்ஸ், எகிப்து, ஆப்பிரிக்க நாடுகள், தென் அமெரிக்க நாடுகள் அதில் அடங்கும்.

மேற்குறிப்பிட்ட நாடுகளில் அமெரிக்கா பிரித்தானியரின் ஆதிக்கத்தில் இருந்து சுதந்திரம் கோரி 13 அமெரிக்க கொலனிகளுள் Georgia தவிர்ந்த ஏனைய கொலனிகள் 1774 இல் குரல் எழுப்பினர். 1775 இல் இதற்கான போராட்டம் ஆயுதம் தாங்கியதாக அமையவேண்டும் என்றும் கட்டளை தளபதியாக George Washington இருப்பார் எனவும் முடிவு எடுத்தனர்.

எட்டு ஆண்டுகள் தொடர்ந்த யுத்தத்தில் பிரித்தானியர் பல சண்டைகளில் வெற்றி பெற்றபோதும் போரில் தோல்வி கண்டனர். சாதுரியமான கெரிலா யுக்திகளை கையாண்ட

5ம் பக்கத் தொடர்ச்சி

# எத்தனை முள்ளிவாய்க்கால்கள் ......

புநழசபந றுயளாபைெவழெ னின் போர்த் தந்திரம் ஒரு காரணமாக இருந்தபோதும் இவர்களது விடுதலை வேட்கையும் வெறியுமே முக்கிய காரணம் எனக் கூறப்படுகின்றது. இதனால்தான் 1777 இல் ஏற்பட்ட கோரமான, இரக்கமற்ற பனிக்குளிரின் மத்தியிலும் இவர்கள் சளைக்காது போராடினர்.

பிரித்தானியாவின் ஆட்சியில் இருந்து விடுதலை பெறுவதற்கான புகழ்பெற்ற அமெரிக்க சுதந்திர பிரகடனம் யூலை 4, 1776 இல் இடம்பெற்றது.

இதுவே போருக்கான அத்திவாரமாகியது. இதனை முதன்முதலில் யூலை 7, 1776 இல் வெர்ஜினியா மாநிலத்தைச் சார்ந்த றிச்சேட் ஹென்றி லீ (Richard Henry Lee) என்பார் முன்மொழிந்தார். இதனை அடுத்து யூலை 10, 1776 இல் ஐவரைக் கொண்ட குழு சுதந்திர பிரகடன தயாரிப்பில் ஈடுபட்டனர்.

யோன் அடம்ஸ் (John Adams) பென்ஜமின் பிராங்ளின் (Benjamin Frankilin) றொஜர் ஜெர்மன் (Roger Sherman), ஆர்.ஆர் லிவிங்ஸ்ரன் (R.R.Livingstone) தொமஸ் ஜெஃபர்சன் (Thomas Jefferson) என்போரே இந்த அய்வர். இந்த பஞ்ச பாண்டவருள் Thomas Jefferson என்பாரே இந்தப் பிரகடனத்தை எழுதினார். இந்தப் பிரகடனத்தின் அழியாத சாகாவரம் கொண்ட வரிகள்....

"We hold these truths to be self evident: that all men are created equal; that they are endowed by their creator with certain inalienable rights; that among these are life, liberty, and the pursuit of happiness."

"எல்லா மக்களையும் சமமாக உலகியற்றியான் படைத்துள்ளான். அத்தோடு எவராலும் அபகரிக்க முடியாத சில உரிமைகளையும் எமக்கு அளித்துள்ளான். அவற்றுள், வாழ்வுரிமை (life) எவருக்கும் அடிபணியாத பிறப்பரிமை (liberty) மண்ணில் நல்லவண்ணம் வாழ்வதற்காக இன்பத்தைத் தேடும் உரிமை (pursuit of happiness) என்பன வெளிப்படையாகக் காணப்படும் உண்மைகள் என்பதை உளம் கொள்கின்றோம். "என்பதே அந்த சாகா வரம் கொண்ட வரிகளாகும்.

மேலே குறிப்பிட்டவாறு இந்த வாசகத்தில் வரும் வாழ்வுரிமை, பிறப்புரிமை, மண்ணில் நல்லவண்ணம் வாழ்வதற்காக இன்பத்தைத் தேடும் உரிமை என்பன மானிடத்தின் அடிப்படை உரிமைகள். அதை அபகரிக்கும் உரிமை எவர்க்கும் இல்லை. இவை மானிடத்தின் அம்சங்கள் என்பதே இந்தப் பிரகடனத்தின் கருப்பொருளாகும். காலம் தோறும் இந்த வார்தைகள் மனிதத்தின் ஆழத்தில் இருந்து ஒலித்த வண்ணமே இருக்கும்.

இந்த அடிப்படை உரிமைகளைப் பேணுவதற்காகவே புவியில் மக்களிடையே அரசாங்கங்கள் உருவாக்கப்படுகின்றன. இந்த அரசாங்கங்கள் ஆளப்படுவோரின் சம்மதத்துடனேயே அவர்களை ஆளும் உரிமையைப் பெறுகின்றன. இந்த உரிமையை எப்போவாவது அந்த அரசாங்கங்கள் முறைகேடாகப் பயன்படுத்தும் போது, இவற்றிற்குச் சாவுமணி அடிக்கும்போது அந்த அரசாங்கங்களை மாற்றும் அல்லது கலைக்கும் உரிமை அந்த மக்களுக்கு உண்டு என்பதும் இப்பிரகடனத்தில் கூறப்படுகின்றது.

மனித செயற்பாடுகளின் விளைவாக ஒரு மக்கள் தம்மை இன்னொரு மக்களுடன் இணைத்த அரசியல் பிணைப்பில் இருந்து பிரிந்து செல்வது தவிர்க்க முடியாததாகும். அவ்வாறு பிரிந்து உலகில் உள்ள மற்றைய



அரசுகளுடன் பிறிதாக சரியாசனம் பெறுவதும் தவிர்க்கமுடியாததொன்றாகும். பிரிவதற்காகத் தம்மைத் தள்ளும் காரணங்களை அவர்கள் வெளிப்படுத்தும் போது அதை மதிக்கவேண்டியது மனுக்குலத்தின் கடமை என்பதும் இப்பிரகடனத்தில் தொனிக்கின்றது. வரலாறும் இதனையே காட்டுகிறது.

அமெரிக்கா சுதந்திர பிரகடனம் செய்தபோது தமிழ் மக்கள் அதே பிரித்தானிய சாம்ராச்சியத்தின் ஆளுகைக்குள் இருந்தனர். ஆயினும் தமிழர் தாம் போர்த்துக்கேயரிடம் போர்முனையில் இழந்த அரசை மீள் உருவாக்குமாறு கேட்கவில்லை. தேசத்தின் தனித்துவத்தை அப்போது அவர்கள் உருவாக்கவில்லை. இலங்கை சுதந்திரம் பெற்று 27 ஆண்டுகளுக்குப் பின்னரே சுதந்திர தமிழீழத்தின் வட்டுக்கோட்டைத் தீர்மானம் ஆகும். ஒற்றை ஆட்சியில் இருந்து விடுபட்டு தனித்தமிழீழம் அமைக்கும் வட்டுக்கோட்டைத் தீர்மானத்துக்கு தமிழ் மக்கள் 1977 இல் ஆணை வழங்கினர்.

அமெரிக்க சதந்திர பிரகடனத்தில் கூறப்பட்டுள்ள அறமே தமிழ் மக்களின் சுதந்திரப் போராட்டம். அமெரிக்க மக்கள் சுதந்திரம் பெற்றமைக்கு இந்த அறமே காரணம்.

தமிழீழ மக்களும் ஒரு நாள் வெற்றி பெறுவர். எங்கள் மண் விடுலை அடையும்.

"ஆனால் நீங்கள் நாடென்று பார்த்தீர்களேயானால் எங்கள் வாழ்நாளில் வெளிச் சக்திகளால் நிச்சயமாக தமிழீழம் ஒன்று உருவாக்கப்படும் ("But if you look at it as a country, I think it would make almost certain that we will see a Tamil Eelam carved out by external forces in our lifetime.") என நினைக்கிறேன்."

இப்படிச் சொல்வது நானல்ல. புலிகள் பயங்கரவாதிகள், நடந்து முடிந்த போர் பயங்கரவாதத்துக்கு எதிரான போர் அதனை வென்றவர் சனாதிபதி மகிந்த இராசபக்சே என அவரை உச்சிமேல் வைத்துக் கொண்டாடும் முன்னாள் இலங்கைத் தூதுவரும் அரசியல் அறிவியலாளர் என அழைக்கப்படும் டயன் ஜெயதிலக்க ஆவார். அவர்களே நேர்காணலில் ஊடகவியலாளர் கேட்ட ஒரு கேள்விக்குப் பதில் அளிக்கும் போது மேற்கண்டவாறு சொல்லியிருக்கிறார். (http://www.ft.lk/2013/05/10/we-are-on-the-road-to-losing-the-peace/)

எங்கள் நாட்டின் விடுதலை எங்கள் பேச்சு, மூச்சு, செயல் எல்லாவற்றிலும் நிறைந்திருக்க வேண்டும்.

எங்கள் நாடு எமக்கே உரித்தானது. அதனை விடுவித்தே தீருவோம் என்ற உறுதி இருக்க வேண்டும்.

தமிழரின் தாகம் தமிழீழத் தாயகம் என்பது வெறும் முழக்கமாக இல்லாமல் அந்த இலட்சியம் அந்த உணர்வு எமது நாடி நரம்பு எல்லாவற்றிலும் நிறைந்திருக்க வேண்டும்.

**ஒருவரை ஒருவர் சந்திக்கும் போது அடுத்த ஆண்டு தமிழீழத்தில் எனச் சொல்லிப் பிரிய வேண்டும்.**

எந்தக் கட்டத்திலும் எத்தனை முள்ளிவாய்க்கால்கள் இடம்பெற்றாலும் எத்தனை அழிவுகள் ஏற்பட்டாலும் எத்தனை இடர்கள் எம்மைச் சூழ்ந்தாலும் எத்தனை ஏமாற்றங்கள் எம்மைத் துரத்தினாலும் வீடு வாசல்களை இழந்தாலும் நாம் நம்பிக்கையை இழக்கக் கூடாது. தாயகக் கனவைத் துறக்கக் கூடாது.

எங்களுக்கும் காலம் வரும் காலம் வந்தால் எம் மக்கள் விடுதலை பெறுவர். இது நிச்சயம்.

போராட்டப்பாதையில் புகுந்தபுலிகளும்... 3ம் பக்கத் தொடர்ச்சி

எதிராக தனது இளவயதுத்தோழர்களை இணைத்து 1972 மே 22 குடியரசுநாள் பகிஸ்கரிப்பு மற்றும் தொண்டைமானாறு பஸ்எரிப்பு (1972 மே 22 இரவு) என்பவற்றை வெற்றிகரமாக செய்துமுடித்தார். அத்துடன் மாணவர் பேரவையினால் நடத்தப்பெற்ற துரையப்பாவின் காணிவேல் குண்டு வெடிப்பை திசைவீரசிங்கத்துடன் இணைந்து (1972செப்டெம்பர்23) நடத்தினார். இக்காலத்தில் குலம் உதயணன் நடேஸ் போன்றோருடன் வல்வெட்டித்துறையின் சிலம்ப வல்லுனரான பிரபுவிடம் தமிழரின் உடற்பயிற்சிக்கலையான தெண்டா சிலம்பம் என்பவற்றையும் கற்றுக்கொண்டிருந்தார்.

இந்நிலையிலேயே இவர் போராட்ட முன்னோடிகளுடன் இணைந்த நெற்கொழு குண்டுவிபத்து (1972அக்டோபர்05) நடைபெற்றது. இக்காலத்திலேயே வல்வெட்டித்துறைக்கு வெளி யேயான தனது தொடர்புகளையும் ஏற்படுத்திக் கொண்டார். செட்டி ரமேஸ் சிவராசா மற்றும் கண்ணாடி எனும் பத்மநாதன் என்பவர்களுடன் அறிமுகமாகிய இவர் அவர்களுடன் இணைந்து தாக்குதல் முன்னேற்பாடாக கல்வியங்காட்டில் வாழ்ந்த சிங்களடொக்டர் ஒருவரின் காரினைக் கடத்தியதடன் (1972டிசம்பர்24) பொலிசாரின் வேட்டையில் இருந்து தப்புவதற்காக அக்காரினை எரித்தது உட்பட வேறுபல நிதித்திரட்டல் செயற்பாடுகளிலும் பங்குபற்றியிருந்தார்.

1973ஜனவரி14இல் சாவகச்சேரியில் சத்தியசீலனை சந்திப்பதற்காக மோகனுடன் சென்ற இடத்தில் சிவகுமாரனுடன் அறிமுகமாகிக்கொண்டார். அடுத்தநாள் வேலணைக்கு வந்த குமாரசூரியருக்கு கறுப்புக்கொடி காட்ட முடியாது தோல்வியுடன் ஊர்திரும்பிய வேளையில் தான்கலந்துகொள்ளும் இறு தியான அகிம்சைப்போர் இதுவென தன்னு டன்வந்த நண்பனான இந்திரலிங்கத்திற்கு உறுதியாகக்கூறினார். அன்று நடந்த மண்கும்பான் குண்டுத்தாக்குதல் முயற்சி யினைத் தொடர்ந்து மாணவர்பேரவையினர் மீதான காவல்துறையினரின் தீவிரவேட்டையில் சிறிசபாரத்தினத்தினால் காட்டிக்கொடுக்கப்பட்ட நிலையில் 23மார்ச்இரவில் பஸ்தியாம்பிள்ளையிடமிருந்து சமயோசிதமாக தப்பிக்கொண்டார். 42நாட்களின் பின் மோகனுடன் வேதாரணியம் சென்று தனது முன்னோடிகளுடன் இணைந்து கொண்டார்.

இவர்களுடன் ஏறத்தாள இரண்டுவருடங்கள் வேதாரணியம் திருச்சி சென்னை என்னும் இடங்களில் கழித்திருந்தார்.இவ்வாறு போராட்டமுன்னோடிகள் மற்றும் மாணவர்பேரவை என்பவற்றுடன் இணைந்து பெற்றுக்கொண்ட நடைமுறை அனுபவங்களின் ஊடாக இடையின்றி இயங்கக்கூடிய ஒருகுழுவை உருவாக்கி ஈழத்தமிழர்களின் உரிமைகளிற்கான ஆயுதப்போராட்டத்தை தொடர்ந்து முன்னெடுக்க முடிவேடுத்தார். இந்த நோக்கத்தில் 1975மார்ச்மாதத்தில் நடைபெறும் கச்சதீவு உற்சவத்தினூடாக இலங்கை திரும்பியிருந்தார்.

தொடரும்....

# இந்துசமுத்திர பிராந்தியத்தில் மையச் சுழலச்சாக மாறும் மாலைதீவும் இலங்கையும்

-இதயச்சந்திரன்-

முள்ளிவாய்க்கால் பேரழிவு நிகழ்ந்து, நான்கு ஆண்டுகளை அண்மிக்கும் இம்மாதத்தில், அந்த அழிவில் பங்காளிகளாக இருந்த வல்லரசாளர்கள் ,வேறொரு மோதல் களத்தினை இந்து சமுத்திரப்பிராந்தியத்தில் திறந்துள்ளதாக அரசியல் நோக்கர்கள் நம்புகின்றனர்.

அந்தக் களம், கேரளாவின் திருவனந்தபுரத்திலிருந்து 200 மைல் தொலைவில் இருக்கும், 1191 தீவுக்கூட்டங்களை கொண்ட மாலைதீவாகும்.

அமெரிக்காவின் அணுவாயுதப் படைத்தளமான தியாகொர்காசியா, இந்தத் தீவிலிருந்து சற்றுத் தொலைவில்தான் இருக்கிறது. பிரித்தானியாவுடன் அமெரிக்கா செய்து கொண்ட உடன்பாடு, 2014 டிசம்பரில் காலாவதியாகிப் போவதால், மாலைதீவில் மாற்றுத் தளத்தை அமெரிக்கா தேடுகிறது என்கிற பார்வையும் உண்டு.

ஆனாலும் அமெரிக்காவின் 'ஆசியா-பசுபிக் சுழலச்சு' என்ற புதிய மூலோபாய திட்டத்தின் ஒரு முக்கிய அங்கமாகவும் இந்த நகர்வு பார்க்கப்படுகிறது.

வரும் செடம்பரில் மாலைதீவில் பொதுத் தேர்தல் நடைபெறவுள்ள நிலையில், அந்நாட்டிலுள்ள டிவெகி சிட்டீ (Dhivehi Sitee) என்கிற இணையம், அமெரிக்காவிற்கும் மாலைதீவிற்கும் இடையே முன்மொழியப்பட்ட , வரைபு பாதுகாப்பு ஒப்பந்தம் குறித்த ஆவணத்தை (Status of Forces Agreement -SOFA) கசியவிட்டுள்ளது.

ஆனால் அப்படியானதொரு எண்ணம் தங்களுக்கில்லை என்று கூறினாலும், கசிந்துள்ள ஆவணம் போலியானதென்று அமெரிக்கா மறுக்கவில்லை.

இவ் ஒப்பந்தம் நிறைவேற்றப்பட்டால், உலக ஆதிக்கத்தின் முக்கிய பிராந்தியமான இந்துமாகடல், மோதல் களமாக மாறும் என்கிறார் அமைச்சர் சம்பிக்க ரணவக்க. இலங்கையில் இந்த வல்லரசுகளின் பனிப்போர் 80 களிலே ஆரம்பித்த கதையை அமைச்சர் மறந்துவிட்டார் போல் தெரிகிறது. இன்னமும் அது தொடர்ந்து கொண்டிருப்பதையிட்டு அதிகாரவாசிகளுக்குக் கவலை இல்லை.

தென் ஆசியாவிலுள்ள பொருளாதார வளம் குறைந்த நாடுகள், வெளிநாட்டு நேரடி முதலீடு எங்கிருந்து வந்தாலும் ஏற்றுக்கொள்ளும் மனப்பக்குவம் படைத்தவர்கள் என்பது பொதுவான உண்மை. இதில் மாலைதீவும் விதிவிலக்கல்ல.

இருப்பினும் ஆட்சி அதிகாரத்தைக் கைப்பற்றுவதற்கு ஏற்படும் போட்டியில், வல்லரசுகள் மேற்கொள்ளும் காய்நகர்த்தல்கள், இரு அணிகளை உருவாக்கிவிடும். அமெரிக்க சார்பு அணி, இந்திய சார்பு அணி என்கிற நிலைப்பாடுகளை அதிகாரப்போட்டியில் இறங்கும் அரசியல்வாதிகள் விரும்பி ஏற்றுக்கொள்வார்கள். இந்திய-சீன மற்றும் அமெரிக்க- சீன முரண்நிலைகளை கையாள்வதாகக் கற்பிதம் கொண்டு, ஏதோவொரு பலமான அணியைத் தேர்ந்தெடுப்பார்கள்.

இலங்கை போன்று மாலைதீவும் ,நீண்டகாலமாகவே இத்தகைய சீனா-இந்தியா-அமெரிக்கா இடையேயான ஆதிக்க முறுகல் நிலைக்குள் அகப்பட்டுள்ளது கவனிக்கத்தக்கது.

இலங்கையில் போர் முடிவுற்று கடந்த நான்கு ஆண்டுகளில் பல மாற்றங்கள் பதிவாகியுள்ளன. பொருண்மிய ஆதிக்கத்திற்கான திரைமறைவு மோதல்கள் சீனாவிற்கும் இந்தியாவிற்குமிடையே தீவிரமடைவதையும் காண்கிறோம். பறிக்கப்படும் காணிகளை பங்கு போடுவதில் பன்னாட்டுக்கம்பனிகள் ஐந்து நட்சத்திர விடுதிகளில் அடிக்கடி கூடுவதையும் பார்க்கிறோம்.

ஆட்சி மாற்றமொன்றிக்கான அமெரிக்காவின் ஐ.நா.தீர்மானங்களும், இருக்கும் ஆட்சி சீனாவின் கட்டுப்பாட்டிற்குள் சென்று விடக்கூடாதென்பதற்காக 'சீபா' ஒப்பந்தக் கனவோடு காத்திருக்கும் அண்டைநாடும், இயங்கமுடியாத நிறுவனங்களைக் கையேற்க தருணம் பார்க்கும் சீனாவும், திருமலைத் துறைமுகம் தம் வசமாகாதா என்று ஏங்கும் இவையனைத்தும், இலங்கையில் குவிக்கும் கவனத்தை மாலைதீவின் பக்கம் திருப்பியுள்ளது போல் தெரிகிறது.

இருதரப்போடு விளையாடும் மாலைதீவு குறித்து, இந்தியாவின் கவனம் எப்போதும் உண்டு.

ஆனாலும் இலங்கை, மாலைதீவு மற்றும் செசெல்ஸ் போன்ற சிறிய பிராந்திய நாடுகளுடன், கடல் கண்காணிப்பில் பாதுகாப்பு ஒத்துழைப்பு வழங்கும் இந்தியா, இந்த நாடுகளின் உட்கட்டுமான அபிவிருத்திப்பணிக்கான போதியளவு நிதி உதவியை வழங்க முடியாமல் இருக்கிறது. இந்த இடைவெளியை அல்லது இயலாததன்மையையே சீனா பயன்படுத்துகிறது.



இந்துசமுத்திரப் பிராந்தியத்தில் இந்தியா மேற்கொண்ட கடந்த காலத் தலையீடுகளை நோக்கினால், 1987 இல் அமைதிப்படையின் வருகை, 1988 இல் ,இரவல் படை மாலைதீவில் மேற்கொண்ட சதியினை முறியடிக்க வழங்கிய உதவி என்பன குறிப்பிடத்தக்கன.

பிரச்சினைகளை உருவாக்குவதும், பின்னர் அதனைத் தீர்க்க ஓடிச் செல்வது போல் நடிப்பதும், இந்த நவீன யுக சதித் தத்துவத்தின் ஒரு பரிமாணமாகவும் இருக்கிறது.

தற்போது, மத்தியில் நீர்த்தேக்கமுள்ள வட்ட வடிவிலான 26 பவழப்பாறைகளில் (atoll), கடற்கண்காணிப்பு ராடர் வலையமைப்பினை இந்தியா நிர்மாணித்துக் கொண்டிருக்கிறது.

தமது தேசிய-பிராந்திய நலனோடு உடன்படும் ஆட்சியாளர்கள், அண்டைய நாடுகளில் இருக்க வேண்டும் என்பதைத்தான் எந்த நாடும் விரும்பும். இலங்கையிலும், மாலைதீவிலும் இதையே இந்தியா எதிர்ப்பார்க்கிறது.

ஆனால் அண்மையில் மாலைதீவில் ஏற்பட்ட ஆட்சி மாற்றத்தால், இந்திய தேசம் விசனமடைந்தது என்பதனை மறுக்க முடியாது.

1965 இல் பிரித்தானியாவிடமிருந்து சுதந்திரம் அடைந்த மாலைதீவில், முடியாட்சி போன்றதொரு எதேச்சாதிகார ஆட்சிதான் நடைபெற்றது.

அதிபர் மாமூன் கயூமின் 30 ஆண்டுகால ஆட்சி 2008 பொதுத்தேர்தலோடு முடிவிற்கு வருகிறது. அக்டோபரில் தேர்தல் நடை பெற்று, நவம்பரில் முஹமட் நசீட் புதிய அதிபர் பதவியை ஏற்கிறார்.

தடுப்புக் காவலில் வைக்கப்பட்டிருக்கும் அரச எதிர்ப்பாளர்களை விடுதலை செய்யுமாறு உத்தரவிட்ட, குற்றவியல் நீதிமன்ற தலைமை நீதிபதி அப்துல்லா முஹமட் அவர்களை, 2012 சனவரியில் கைது செய்கிறார் மாலைதீவின் வரலாற்றில் முதன் முறையாக சனநாயக ரீதியில் அதிபராகத் தெரிவானவர் என்று சொல்லப்படும் முகமட் நசீட்.

இதற்கு எதிராக பொலிசாரும் பொது மக்களும் பெரும் போராட்டங்களில் ஈடுபட்டனர்.

இதன் எதிர்வினையாக ஆட்சி நிர்வாகம் சீர்குலைந்து, அதிபர் நசீட் பதவி விலகுகின்றார்.

இது ஆட்சிக்கவிழ்ப்பா அல்லது பதவி விலகலா என்கிற விவாதங்கள் நீடிக்கும்போது, நீதிமன்ற அழைப்பாணையையும் , பயணத்தடையையும் மீறிய குற்றச்சாட்டினை முன்வைத்து, அவர் மீது பிடியாணை ஒன்று பிறப்பிக்கப்பட்டது.

பின்னர் அவர் இந்தியத்தூதரகத்தில் அடைக்கலம் புகுந்து ,10 நாள் கழித்து வெளியே வந்தார்.

தற்போது ஆட்சியில் இருக்கும் முகமட் வாஹிட், தனது அதிகாரத்தை பலப்படுத்தும் வகையில் இந்தியாவிற்கு எதிரான நகர்வொன்றினை மேற்கொண்டார்.

அதாவது, இந்தியாவின் பெங்களூரைத் தளமாகக் கொண்டியங்கும் புஆசு என்கிற நிறுவனம், முஹமட் நசீட் காலத்தில் செய்து கொண்ட மாலே விமானநிலைய நிர்வாக ஒப்பந்தத்தினை வகீட் இரத்து செய்தது விட்டார்.

511மில்லியன் டொலர் முதலீட்டில் , புதுப்பிக்கக்கூடிய 10 வருட ஒப்பந்தத்தை ரத்து செய்த விவகாரம், தவறானது அல்ல என்கிற தீர்ப்பினை சிங்கப்பூர் உயர் நீதிமன்றமும் உறுதிப்படுத்தியுள்ளது. ஆனால் இதற்கான ந்ட ஈடாக கூ800 மில்லியன் வழங்கவேண்டுமென புஆசு நிறுவனமும், அது அதிகமான தொகை , சரியான தொகை ஏறத்தாள கூ150-350 மில்லியனாக இருக்குமென்று மாலைதீவு அரசு கூறுகிறது.

இந்த விடயம் பாதுகாப்பு மற்றும் பொருண்மிய உறவில் இவ்விரு நாடுகளுக்கிடையே உரசலை உருவாகியுள்ளது.

இந்த நிலையிலேயே அமெரிக்க பாதுகாப்பு ஒப்பந்த இரகசிய ஆவணமும் கசிந்துள்ளது.

ஆசியாவின் கடல்வழித் தலைவாசலில் நிலைகொண்டுள்ள மாலைதீவு மற்றும் இலங்கை போன்ற நாடுகளின் அமைவிடம் என்பது, அவை கேந்திர முக்கியத்துவம்மிக்க மையங்களாகவும் ,மையச் சுழல் அச்சாகவும் மாறிக்கொண்டிருக்கிறது என்பதனை சீனாவின் முத்துமாலைத் தந்திரோபாயங்கள் உட்பட, அமெரிக்கா -இந்தியா மேற்கொள்ளும் கடற்கண்காணிப்பு ராடர் நிர்மாணிப்புக்களும் உணர்த்துகின்றன.

வளம் குறைந்த சிறிய நாடுகளில், தமது பொருண்மிய மேலாதிக்க நலன்களுக்காக வல்லரசாளர்கள் மோதும் போக்கானது, அந்த நாடுகளின் வாழும் சிறுபான்மைத் தேசிய இனங்கள் தமது அடிப்படை உரிமைகளை வெகுவிரைவில் இழக்கும் சூழ்நிலையை உருவாக்கப் போகிறது. வடக்கில் அரசால் தீவி ரமாக முன்னெடுக்கப்படும் நில அபகரிப்பிற்கு எதிராக குரல் எழுப்ப இவர்கள் மறுப்பது, இந்த யதார்த்தத்தை புரிய வைக்கிறது.

Get all types of groceries and essential items in good prices

சனி ஞாயிறு தினங்களில் உடன் நண்டு
ஊர் ஆட்டிறைச்சி பங்கு பெற்றுக் கொள்ளலாம்




# மலிவுவிற்பனை

31 மே வரை

பீட்ரூட்



39¢

டுபாய்
பூசணி



39¢

கத்தரிக்காய்



79¢




மைசூர் பருப்பு
$4.99




Red Path
சீனி
1.99




99¢

2 சீக்கன
அப்பளம்
99¢

சன்சிட்டி
ரவை
$4.99

தேங்
பால்
9



## Suncity Party P

அனைத்துவிதமான பாட்டி பொருட்கள், பலூன
ஹிலியம் பலூன் பரிசு பொருட்கள், பரிசு பைகள், சா
சாமி சிலைகள், ரேம்கள், சோடனைகள்,
வாடகைக் கதிரைகள் மற்றும் ஏராளமான
பொருட்கள் இங்கு கிடைக்கும்




**தமிழ் அரசு** மரவள்ளி பொரியல்1.49, பகோடா 2.99, மிக்சர் 2.99

## கணவாய் சுத்தம் செய்து கொடுக்கப்படும்

**OPEN 7 DAYS**
8.30AM-10.30PM

மரவள்ளி



**79¢**

**mathura**
நல்லெண்ணெய்
**$3.99**

சன்சிட்டி பிரான்ட்
இட்லி அரிசி
**$4.99**

சன்சிட்டி பிரான்ட்
அவித்த மா
**$4.99**

சன்சிட்டி பிரான்ட்
மொட்டைக்கறுப்பன் அரிசி
**$4.99**

**Niru**
மிளகாய்த்தூள்
**$4.99**

இறால்



**$3.99**

கணவாய்



**$3.99**

2 சீக்கன்
மோர் மிளகாய்
**99¢**

ாயப்
ுன்
¢

கோமகள் டின்
பால்
**99¢**




Dream Station | 416-833-3080

ace

ள்
படங்கள்.

**Key Cutting Service Available**

## SUN CITY PLAZA

**Unit 17, 2761 Markham Road**
**Scarborough,ont M1X 0A4**
(Markham and McNicoll)



# பிரிகேடியர் சரிக்குமார் மாஸ்ரர்

## 4ம் ஆண்டு வீரவணக்க நாள் 15-05-2013







தமிழீழ விடுதலைப் புலிகள் அமைப்பில் சிங்களப் படைமுகாம் மீது மீது தாக்குதல் நடத்துவதற்கு முன்னரும், எதிரிகளின் படைப் பலம், படைக் கட்டமைப்புக்கள் போன்ற வற்றினைத் தெரிந்து தகவல் கொடுக்கவும் , எதிரியின் அனைத்து நடவடிக்கைகளையும் கண்காணித்துப் பின் போராளிகளின் நடவடிக்கை சமர்களுக்கான தகவல்களை வழங்குவதற்கும் வேவுப்பிரிவு தேசியத்தலைவரால் உருவாக் கபட்டது. அதற்காக அல்லும் பகலும் தன் உழைப்பாலும் போராளிகளின் ஈகத்திற்க்கு உயிர்கொடுத்து வரைபடைமுலம் உயிரோட்டம் கொடுத்தவர்களில் பிரிகேடியர் சசிக்குமார்



மாஸ்ரரின் பங்கும் அளப்பெரியது என்றால் மிகையாகாது.தேசியத்தலைவரின் வழி காட்டலில் இத் தளபதியில் வளர்ப்பில் வார்த் தெடுத்த பல போராளிகள், தங்கள் ஈகத்தால் எம் தாய்மண்ணில் பல சரித்திரம் எழுதி சென்றார்கள்.பின் தளத்தில் சென்று குறைந்த இழப்பில், பல வழிகளை தன வரைபடம் நேர்த்தியான ஆற்றல் மூலம் வடிவமைத்து திட்டமிட்டு தலைமையிடம் சமர்பிக்கும் நேர்த்தியான தேசத்தின் மீது கொண்ட உயிரோட்டத்தால் தேசியத்தலைவரிடம் மதிப்பும் நம்பிகையும் கொண்டு விளங்கினார் பிரிகேடியர் சரிக்குமார் அவர்கள்.

போராளிகள் மத்தியில் பிரிகேடியர்" சரிக்குமார் மாஸ்ரர்" என அன்புடன் மரியாதை யுடன் அழைக்கப்பட்டு வேவுத்திட்டமிடல்கள் மூலம் பல தாக்குதல் வேவுத் திட்டமிடளாலும் பெரும் பதிப்புடன் நாளும் போராளிகள் மனதில் இடம் பிடித்தார். ஆயினும் மக்கள் மத்தியில் அறிந்திருந்தும் இப்படியான் ஓர் தளபதி உள்ளார் என்றும் ஆயினும் வெளியில் தெரியா வெளிட்சமாக நாளும் தொடர்ந்தார் தேசபணி கள் ஆயினும் தன வாழ்நாளை தாய்நாட்டின் விடியலுக்காக அர்பணித்த பிரிகேடியர் சசிக்குமார் அவர்களின் வாழ்வியல் எப்படி இருக்கும் என்பதற்கு ஓர் உதாரணமாகவும் னி அவர் வழிகாட்டலில் சிறப்புத் தளபதியாக இருந்த வரைபடைத்துறை னி வேவுப்புலிகள் பிரிவின் ஈகத்தை தியாக உணர்வை அவர்கள் தாய்நாட்டிற்காக அர்பணித்த பெரும் தியாகங்கள் சொல்லில் அடங்காதவை ஆயினும் விடுதலை சுவடுகள் உங்கள் மனதை தாய்மண்ணின் நினைவுடன் ஆளட்டும் என்றுமே , பிரிகேடியர் சரிக்குமார் மாஸ்ரர் விடுதலை பயணத்தில் அவரின் கடமை எவ்வளவு முக்கியம் வாய்ந்தது என்பதையும் வேவுப்புலிகளின் ஈகத்தையும் ஓர் கனம் உணர்ந்து பாருங்கள் !தமிழீழ மண்ணில் பல சிங்களப் படைமுகாம் தாக்குதலின் தார்ப்பரியத்தை விளங்கிக்கொள்ள வேண்டு மா-னால், எங்களது வேவு வீரர்களைப் புரிந்து கொள்ள வேண்டும்.

அனைத்து தாக்குதல்களையும் பின்னூ ட்டத்தில் வேவுப்புலிவீரர்கள் பெற்றுத்தந்த வெற்றி யாவும் என்பதை யாவரும் மடந்த்தில்லை ஆயினும் வெளிட்சத்திற்கு இந்த விடுதலை உரங்கள் தெரிவதில்லை என்பதே உண்மை.

எங்களது வேவு வீரர்கள் அபூர்வமான் மனிதர்கள். சாவுக்கும் அஞ்சாத அவர்களது வீரத்தை எண்ணிப்பாருங்கள். அது போற்றுதற் குரியது. பகைவனின் நெஞ்சுக்கூட்டுக்கு மேலே-றி வேவு பார்த்துவிட்டு மீளும் அந்த மனத்துணிவு அபாரமானது ' அது ஒரு இணைதேட முடியாத நெஞ்சுறுதி !தாங்கள் கொண்ட இலட்சியத்தில் அவர்கள் எத்துணை பற்றுக் கொண்டவர்களாக இருக்கிறார்கள் என்பதைச் சிந்தித்துப் பாருங்கள். அந்த இலட்சியத்திற்காகத் தங்களது இன்னு யிரையே துச்சமெனத் தூக்கி எறிய மனமுவந்து நிற்கும் அவர்களது தியாக உணர்வு, மேன்மை மிக்கது உன்னதமானது!

தாயகத்தின் மீதும் தாயகத்து மக்கள் மீதும் அவர்கள் கொண்டிருந்த நேசம் இருக்கிறதே. அது சாதாரணமானதல்ல. அது ஒரு அளவு கடந்த காதல் ' தளர்ச்சியற்ற பிணைப்பு !அந்த வீரர்களின் ஒவ்வொரு அசைவுக்குப் பின்னால் இருந்தும், எதிரியின் வலைப்புகளிற்கு மத்தியில் நின்று அவர்கள் எடுத்த ஒவ்வொரு முடிவிற்குப் பின்னால் இருந்தும், அவர்களை இயக்கிக் கொண்டிருந்த உந்துவிசை னி அவர்களுடைய அந்த "மனநிலை" தான்.

எங்கள் அன்னைபூமியை ஆக்கிரமித்தி நிற்கும் சிங்களப் படைகளின் மிகப் பெரியதும் , மிகவும் பாதுகாப்பானதுமான பல தலைமையகப் படையரனுக்குள் வுவுப்புளி வீரர்களின் தடம் பதிந்துள்ளது.பன்னாட்டு சக்திகளும் னி சிறீலங்கா அரசும் இணைந்து எம் மக்களைக் கொன்று குவித்து இனவழிப்பை அரங்கேற்றிய இனவெறியர்களுக்கு எதிராக விடுதலை தாகத்துடன் பல போராரிகளுடன் இணைந்து களமாடி முள்ளிவாய்க்கால் மண்ணில் 2009ம் வருடம் வைகாசி 15ம் நாள் ஆயிரம் ஆயிரம் மாவீரர்களுடன் இணைந்தார்.

இன்றும் தமிழீழ தேசம் மாபெரும் தளபதி யை இழந்து தகிக்கும் தகிப்பை உணர்ந்து நாளை ஆயிரம் ஆயிரம் சசிக்குமார்கள் உருவாக்கி அவரின் விட்டுசென்ற பணியை ஏற்று தமிழீழம் மலர வைப்போம்.

# ஆழியவளையிலிருந்து எழுந்த அலைமகள் கடல்புலி மேஜர் கலாநிதி!

## – ஒரு போராளியின் புனிதப் பயணம்

இமயம் முதல் குமரி வரையும், கங்கை தொடக்கம் கடாரம் வரையும் எட்டுத் திக்குகளிலும் வெற்றிக்கொடியைப் பரப்பி விட்டவன் தமிழன். ஆட்சியுரிமையோடு ஆசியாவில் வாழ்ந்து இந்துமாகடலின் ஆளுகையை தனது முழுக்கட்டுப்பாட்டில் வைத்து அதற்கு சொந்தம் கொண்டாடியவன் எமது முப்பாட்டன் சோழன்.

இதனால் உலகில் முதல் கப்பல் படையை நிறுவி கடலில் படை நடத்தியவனும் தமிழன் என்பது உண்மை வரலாறாகும். இவ்வாறு பெருமைகொண்ட தமிழினம் சொந்த நாடின்றி, சொந்த கடல்வளமின்றி, இருப்புக்கு இடமின்றி, நாதியற்று, நாடு நாடாக அலையும் நிலையில், தன்மானமிழந்து பணலாபம் கொண்டு வக்கற்ற வாழ்வில், திக்கற்ற இலக்கில் இன அடையாளத்தை தொலைத்து வாழும் நிலையில் சொந்த நாட்டில் எழுந்த உரிமை உணர்வும், விடுதலை தாகமும், எந்த இனத்திலும், எந்த நாட்டிலும், ஒரு விடுதலை இயக்கம் வைத்திராத படைகளை அமைத்து, வாழுகின்ற தமிழரின் வீரம், மானம் ஒருங்கே சேர எமது தேசியத் தலைவர் பிரபாகரன் அவர்களினால் உருவாக்கிய கடல் புலிகள் படைத்த போர்க்காவியம் தமிழரின் பரம்பரையையும், தாய் மண்ணின், பற்றையும் எமக்கு மீண்டும் நினைவூட்டியது.

நாம் தமிழர் என்ற உணர்வும், எம்மை நாம் முற்றாக அறிந்து கொள்ளும் நிலையும், எமது இனத்தின் தனித்துவம், அடையாளத்தை நிலை நிறுத்திக்கொள்ளும் உறுதியும் தமிழராகிய எமக்கு இருக்க வேண்டும்.

தலைமை தாங்கி வழிநடத்துபவர் தப்பிச் செல்வதைவிட தானே முன்னின்று படை நடத்திய பெருமையும், தம்மை அர்ப்பணித்து தமிழ் மானம் காத்த வல்லமையும் எமது விடுதலைப் போராட்டத்தில் நடந்தேறியுள்ளது.

கடல் புலிகளின் காவியத் தலைவி லெப்.கேணல் நளாயினி தொடுத்த கடல் போர், தகர்ந்த சிங்களக் கடற்கலங்கள், காட்டிய வழி எண்ணற்ற கடற்புலிப் பெண் போராளிகளை விடுதலை இயக்கத்திற்குப் பெற்றுக்கொடுத்தது.

காலத்தால் அழியாத போர்க்காவியம் ஒன்று ஈழத்தில் எழுதப்பட்டுள்ளது. எமது இளையோர்கள் ஏந்திய போர்க் கருவி, இடைவிடாது தொடுத்த போர்கள், காட்டிய வீரம், மூட்டிய விடுதலைத் தீயில் அவர்களின் தற்கொடை எரிந்து எதிரியைத் திணறடித்த தீரம், எமது தலைவனின் உருவாக்கத்தில் எழுந்த முப்படைகள் தமிழனின் புறநானூற்றைப் புரட்டிப் போட்டதையும், புதிய வரலாறு தமிழனின் வரலாற்றில் பதிவு செய்ததையும் பார்த்திருக்கின்றோம்.

காலத்தின் தேவையறிந்து எமது தலைவன் உருவாக்கிய முப்படைகளில் ஒன்றான கடல் புலிகள் அதிலும் தமிழ்ப் பெண்களின் வீரம் என்பது எண்ணிப் பார்க்க முடியாத தற்கொடையையும், தம்மைஇழந்து தமிழ் மானம் காத்த பெருமையையும் எழுதி முடிப்பதற்கு எவ்வளவு காலம் எமக்குச் செல்லும் என்பதைக் கூறமுடியாத நிலையில் தமிழ்ப் பெண்களின் வீரம் ஈழத்தில் எழுந்த விடுதலைப்போரில் ஒவ்வொரு படையணியிலும் அவர்கள் காட்டிய துணிச்சல், சாதனைகள் விவரிக்க முடியாதளவு விரிந்து கிடக்கின்றன.

தரையில் சாதித்த எமது தமிழ்ப் பெண்கள் கடலில் சாதிக்கப் புறப்பட்ட போது பெண் போராளிகளிளிருந்து தேர்ந்தெடுக்கபட்ட சில போராளிகளில் ஒருவராக களமிறங்கியவர் மேஜர். கலாநிதி ஆகும். லெப். கேணல் நளாயினி தலைமையில் கடல் புலிகளின் பெண்கள் அணி உருவான போது முதல் பாசறையில் பயிற்சி பெற்று வெளியேறியவர், பயிற்சியில் காட்டிய தீரம், முன்னணிப். போராளிகளில் ஒருவராக கனரகப் ஆயுதப் பயிற்சிக்கு தெரிவு செய்யப்பட்டு 50 கலிவர் சுடுகலனின் சுடுனராக வெளியேறினார்.

வடமராட்சி கிழக்கு மண்ணில் ஆழியவளை ஊர் மிகவும் பிரபல்யம் பெற்றதாகும். இவ்வூரில் உணர்வுமிக்க விடுதலைப் பற்றுக்கொண்ட குடும்பத்திலிருந்து தமிழினத்தின் விடுதலைக்காகப் புறப்பட்ட நந்தினி என்னும் இயற் பெயர் கொண்ட மேஜர் கலாநிதி, இராசேந்திரம் தம்பதிகளின் மூன்றாவது பெண் பிள்ளையாகும்.

ஐந்து சகோதரிகளும், ஒரு சகோதரனையும் கொண்ட குடும்பத்தில் விடுதலைக்காக தமது பங்கைச் செலுத்த விடுதலைப் போராளியாக எழுந்த இவருடைய குடும்பம் விடுதலைக்காக போராளிகள் புறப்பட்ட காலத்திலிருந்து ஆழியவளை ஊரில் ஆதரவு வழங்கிய குடும்பங்களில் ஒன்றாகும்.

பொங்குகின்ற தமிழுணர்வு மங்காது, மறையாது காத்துநின்ற மாவீரர்கள் வாழ்ந்த, வாழ்கின்ற வடமராட்சி கிழக்கு மண்ணில் என்றும், எப்போதும் விடுதலை உணர்வு வீழ்ந்து விடவில்லை. இந்து மாகடலின் மடியில் படுத்துக் கிடக்கின்ற வங்காள விரிகுடாவில் ஆர்ப்பரித்து எழுகின்ற அலைகளின் தாலாட்டில் உறங்கியும், உறங்காமலும் விழித்து சொந்த மண்ணில் உரிமையுடன் வாழ எண்ணும் மக்களின் மத்தியில் பற்றோடு எழுந்த நூற்றுக் கணக்கான விடுதலை வீரர்களின் ஆன்மா உறங்காமல் விடுதலையை நோக்கி விழித்துக்கொண்டிருக்கின்றது.

எங்களுக்கின்றோர் நாடு இங்குதான் அமைந்திருக்கின்றது. காலத்தால் அழியதா வரலாற்றுப் பெருமையைக் கொண்ட எமது தமிழினம், வரலாறு கூறுகின்ற வாழ்விடமாக எமது மண் எமக்காக இருக்கின்றதை அனைத்துலகம் அங்கீகரிக்க வேண்டும். விடுதலை பெற்றவர்களாக தலை நிமிர்ந்து எமது மக்கள் சொந்த நாட்டில் வாழும் உரிமையை வழங்க வேண்டும். ஏதிலிகளாக புலம் பெயர்ந்து வாழ்கின்ற எமது மக்கள் சொந்த நாடு திரும்பி இன இருப்புக்கான அதிகரிப்பை ஏற்படுத்த வேண்டும். எமது இனம் பலமாக வாழ்வதற்கு இதுவும் தேவையாகும். அதற்கான அனைத்து உதவிகளையும் ஐக்கிய நாடுகள் மன்றம் செய்தாக வேண்டும். என்பது விடுதலைக்காக போராடிக் கொண்டிருக்கின்ற ஒரு தேசிய இனத்தின் ஒன்று பட்ட குரலின் வெளிப்பாடாகும்.

ஒரு போராளியின் புனிதப்பயணம் என்பது கல்லும், முள்ளும் நிறைந்த பாதையில் பயணித்து சோதனைகளையும், வேதனைகளையும் தாங்கிக் கொண்டு சொந்த இன மக்களின் விடுதலைக்காக தங்களை அர்ப்பணிக்கும் உயரிய தற்கொடையில் முடிவடைகின்றது.

இந்தப் பயணத்தில் இணைந்து கொண்ட மேஜர். கலாநிதி தன்னை வழிநடத்திய கடல் புலிகளின் பெண்கள் அணியின் தளபதி நளாயினியின் பாசத்திற்குரிய போராளிகளில் ஒருவராகி கடல் சண்டைகளில் தனது சாமர்த்தியத்தை வெளிப்படுத்தினாள். தேசியத் தலைவர் மீது கொண்டபற்றும், விடுதலையில் கொண்ட விருப்பமும் தளபதி நளாயினி அவர்களை உயரிய தற்கொடைக்கு தன்னை அர்பணித்து கடல் கரும்புலியாகி சிங்களப் படைக்கடல்கலத்தை மன்னார் கடற்பரப்பில் தகர்த்தெறிந்து சாதிக்க வைத்தது. தளபதியாக, வழிகாட்டியாக லெப். கேணல் நளாயினி அவர்களின் பாதம் பதிந்த பாதையில் மேஜர். கலாநிதியின் பாதமும் பதிந்து சாதிக்கத் தொடங்கியது.

யாழ் நோக்கிய சிங்களப்படையினரின் ஆனையிறவில் இருந்து "யாழ் தேவி" நகர்வுத் தாக்குதலின் எதிர்ச்சமரில் கனரக ஆயுதப் பிரிவில் 50 கலிபர் உடன் களமாடி விழுப்புண் அடைந்திருந்தார். அதற்குப் பின்பு "தவளைப்பாய்ச்சல்" சிங்களப் படைத் தளத் தாக்குதலிலும் 50 கலிபர் உடன் களமிறங்கி வரலாற்றுப் பதிவையும் பெற்றுக்கொண்டார்.

விடுதலைப் புலிகளால் மேற்கொள்ளப்பட்ட படைநகர்வுகள், சிங்களப் படைத்தள மீதான தாக்குதல்களிலும், எதிர்ச்சமர்களிலும் மேஜர் கலாநிதி யின் வீரம் வெளிப்படுத்தப்பட்டது. கடல் புலிகளுக்குத்தெரிவு செய்யப்பட்ட போ தும் கனரக ஆயுதங்களைக் கையாளுவதில் தேர்ச்சி பெற்றவராக இருந்ததனால் தரைச்சமர்களுக்கும், முகாம், தளத்தாக்குதல்களுக்கும் மேஜர் கலாநிதியின் அணியினர் அழைக்கப்பட்டிருந்தார்கள்.

1976 ம் ஆண்டு முதலாவது மாதம் ஏழாம் நாள் தாய் மண்ணில் பிறந்த நந்தினி ஆரம்ப கல்வியை தனது ஊரிலும் க.பொ.த.சாதாரணக்

12ம் பக்கம் பார்க்க



11ம் பக்கத் தொடர்ச்சி

# ஆழியவளையிலிருந்து எழுந்த அலைமகள்

## கடல்புலி மேஜர் கலாநிதி!

### – ஒரு போராளியின் புனிதப் பயணம்

கல்வியை நாகர்கோவில் மாவித்தியாலயத்திலும் பயின்றார். இக்காலப் பகுதியில் விடுதலைப் போராட்ட எழுச்சியும், வளர்ச்சியும் எண்ணற்ற இளையோர்களை தாய் மண்ணின் விடுதலைக்காக போராட்டத்தில் இணைவதற்குத் தூண்டியது. இதற்கு விதிவிலக்கற்றவளாக 1992 ம் ஆண்டு ஜனவரி மாதத்தில் தன்னை ஓர் போராளியாக வரலாற்றில் பதிவு செய்தாள். இக்காலப்பகுதியில் இவருடைய குடும்பம் நாகர்கோவில் ஊருக்கு இடம்பெயர்ந்து வாழ்ந்து வந்தது குறிப்பிடத்தக்கதாகும்.

கொக்குளாய் தொடக்கம் பருத்தித்துறைமுனை வரை கிழக்குக் கடற்கரையில் பரவிக்கிடக்கின்ற பழந்தமிழர் மண் என்றும் எமது சொந்த மண்ணாக இருக்க வேண்டும் என்ற உறுதி அனைத்து ஊர் மக்களிடமும் நிறைந்து காணப்பட்டன. முல்லைத்தீவு மண்ணைத் தொட்டு நிற்கின்ற யாழ் மண்ணின் கிழக்கு ஊர்களில் வாழ்கின்ற மக்கள் விடுதலைக்காக கொடுத்த விலை அதிகமாகும். இந்த வரிசையில் ஆயிரக்கணக்கான மாவீரர்களை மண்ணின் விடுதலைக்காக ஈந்த ஊர்கள் என்றும் வரலாற்றில் அழியாத பதிவைக் கொண்டிருக்கின்றது.

கொக்குத்தொடுவாய், நாயாறு, செம்மலை, அலம்பில், முல்லைத்தீவு, வட்டுவாகல், முள்ளிவாய்க்கால், வலைஞர்மடம், அம்பலவன் பொக்கணை, புதுமாத்தளன், சாலை, சுண்டிக்குளம், கட்டைக்காடு, வெற்றிலைக்கேணி, ஆழியவளை, உடுத்துறை, வத்திராயன், மருதங்கேணி, தாளையடி, செம்பியன்பற்று, மாமுனை, நாகர்கோவில், அம்பன், குடத்தனை, மணற்காடு ஆகிய ஊர்கள் சொல்லும் கதைகள் விடுதலைப்போரில் மக்களின் பணியும், அர்ப்பணிப்புக்களும் அளவிட முடியாத நிலையில் போராளிகளின் புனிதப் பயணமும் விடுதலையை நோக்கி துன்பங்களையும், துயரங்களையும், இடம்பெயர்வுகளையும் சுமந்த மக்களை அணைத்துக் கொண்டு தொடர்ந்தன.

எப்போதும் விடுதலையை தோள்மீது சுமந்த மக்கள் விடுதலைப் போராளிகளுக்கு தோள்கொடுத்து கடலில் படை நடத்துவதற்கும் சிங்களப் படையை எமது கடலிலிருந்து விரட்டியடிப்பதற்கும் கடலில் காவியம் படைப்பதற்கும் துணை போயினர்.

மண்பற்றும், விடுதலைப் பற்றும், மொழிப்பற்றும் கொண்ட மக்கள் இடம் பெயர்ந்த போதும் கடற்கரையெங்கும் கால் பதித்து மீண்டும் விடுதலை பெற்றவர்களாக சொந்த மண் திரும்புவோம் என்ற நம்பிக்கையில் காத்திருந்தனர்.

1991 ம் ஆண்டு ஆகாய, கடல் வெளிச் சமரும், வெற்றிலைக்கேணி சிங்களப் படைத் தரையிறக்கமும் தேசியத் தலைவரின் சிந்தனையில் கடலில் எமது பலம், எதிரியைத்தாக்கும் திறன், எமது தாய் நாட்டின் விடுதலையில் தரைப் படையணிகளின் வளர்ச்சியின் மறுபுறத்தில் கடலின் ஆளுகையில் கடல்புலிகளின் வளர்ச்சியும், பலமும் கடலில் சிங்களக் கடற்படையின் பிரசன்னம், பலம் என்பவற்றை தகர்த்தெறியமுடியும் என்ற நம்பிக்கையில் தளபதி சூசை அவர்களின் தலைமையில் ஒழுங்கு படுத்தப்பட்டது.

விடுதலை இயக்கத்தின் வளர்ச்சியில் ஒவ்வொருபடி முன்னேற்றத்தில் காணப்பட்ட கடல்புலிகள் படைத்த சாதனைகள் எண்ணிலடங்காதது. சிங்களக் கடல் படையின் தரையிறக்க முயற்சிகள் தடுத்து நிறுத்தப்பட்டன. அது மட்டுமல்லாது கடலிலிருந்து எமக்குத் தேவையான போர்க்கருவி தளபாடங்கள் இறக்கப்படுவதற்கும், ஏனைய வசதிகளை எமது விடுதலைப் போராளிகள் பெற்றுக்கொள்வதற்கும் கடல் புலிகளின் போரிடும் திறனும், கடற் கரும்புலிகளின் தற்கொடையும் காரணமாக அமைந்தன.

இளநிலைத் தளபதியாக களத்தில் மிளிர்ந்த மேஜர் கலாநிதி விடுதலைப் புலிகள் இயக்கத்தினால் நடத்தப்படுகின்ற பல தாக்குதல்களில் தனது அணியுடன் பங்குபற்றுவதும், கடல் புலிகளின் பெண்கள் அணியை பலமுள்ளதாக மாற்றுவதற்கான போராளிகளில் முன்னிலைப் படுத்தப்பட்டவளாகவும் விளங்கினாள்.

சிறப்புப் பயிற்சினைப் பெற்றுக்கொண்ட மேஜர் .கலாநிதி கடல் புலிகளின் மகளிர் அணியின் 4ம் ,5ம் ,9ம் பயிற்சிப் பாசறையின் பயிற்றுனர்களில் ஒருவராக திகழ்ந்து நூற்றுக்கணக்கான போராளிகளை உருவாக்குவதற்கு காரணமாக விருந்தாள்.

அதே வேளையில் கடற்சண்டைப்பயிற்சியையும் பெற்றுக்கொண்டு கடற் சண்டைகளிலும் தன்னை ஈடுபடுத்தினாள். வடமராட்சி கிழக்கு மண்ணின் வீரம் செறிந்த பெண்போராளிகளில் ஒருவரான மேஜர் கலாநிதி அவர்களின் சிந்தனை, செயல்பாடு, அனைத்தும் விடுதலையோடு சார்ந்ததாகவே அமைந்திருந்தன.

1995ம் ஆண்டு இறுதியிலும், 1996ம் ஆண்டு ஆரம்பத்திலும் யாழ் மண்ணிலிருந்து மக்கள் பாரியளவில் வன்னிக்கு இடம்பெயர்ந்தனர். இக் காலப்பகுதியில் கடல் புலிகளின் சுகன்யா படையணியின் தளபதியாக பணியிலிருந்த மேஜர் கலாநிதி முல்லைதீவு சிங்கள படைத்தள அழிப்பில் தனது அணியுடன் சமரில் ஈடுபட்டாள்.

முல்லைமண் எமது மூதாதையர் மண். எமது சொந்த மண்ணான இந்த மண்ணில் நிலை கொண்டிருந்த சிங்களப்படைத்தளம் முற்றாக அழிக்கப்பட்டு, வரலாற்றில் பாரிய வெற்றியை விடுதலை இயக்கமான விடுதலைப் புலிகள் இயக்கம் பெற்றிருந்தது மட்டுமல்லாது சிங்கள அரசின் படைச்சமநிலையில் மேலோங்கியும் இருந்தனர். இந்த நிலையில் வெளிநாடுகளின் பார்வை விடுதலைப் புலிகள் இயக்கமீது விழுந்ததனால் தங்கள் பிரதிநிதிகளை விடுதலைப்புலிகள் இயக்கத்துடன் சந்திப்பை ஏற்படுத்த அனுப்பி வைத்தனர்.

எமது பலம் அதிகரிக்கப்படும் போது, எம்மை அணுகுவதற்கும் ஏற்றுக்கொள்வதற்கும் வெளிநாடுகள் முன்வரும் " என்ற தேசியத் தலைவரின் கருத்துக்கேற்ப எல்லாம் நடந்தேறி வந்தன. இச் சிங்களக் படைதள அழிப்பில் ஈடுபட்டு தங்களை அர்ப்பணித்த அனைத்துப் போராளிகளுக்கும் இந்நிகழ்வுகள் அர்ப்பணிக்கப்படுகின்றன. ஏனெனில் இழப்புக்களின் மூலம் எமது இழந்த தாய்நாட்டை மீட்டெடுக்கும் புனிதப் போரின் வெற்றியின் அடையாளங்களாக இம் மாவீரர்கள் என்றும் தமிழர் நெஞ்சங்களில் நிறைந்திருப்பார்கள்.

தனது இனிமையான குரலால் விடுதலைக்கானம் பாடி போராளிகளையும் மக்களையும் விடுதலை உணர்வுக்குள் கட்டி வைத்திருந்த மேஜர் சிட்டு பிறந்ததும் வடமராட்சி கிழக்கு மண்தான் என்பதில் வரலாற்றுப் பெருமையை அந்த மண் பெற்றுக் கொள்கின்றது.

ஏனெனில் மேஜர் சிட்டுவின் குரல் இன்னும் என்றும் எமது காதுகளில் கேட்டுக்கொண்டேயிருக்கின்றது. விடுதலைக்காகப் போராடுகின்ற மக்கள் மத்தியிலிருந்து பல்வேறு உணர்வாளர்கள் தங்களின் நிலையில் உள்ளத்திலிருந்து எழுகின்ற உணர்வுப் பெருக்கை எழுத்தாலும் இசையாலும் வெளிப்படுத்தி எங்கும் தமிழ் உணர்வு என வாழ்ந்த காலம் மறக்க முடியாததாகும்.

வற்றாத ஊற்றாக தமிழுணர்வும் விடுதலை உணர்வும் பொங்கியெழுந்த காலத்தில் புலியாக எழுந்து விதையாக விழ்ந்த ஆயிரக்கணக்கான மாவீரர்களின் புகழ்பூத்தமண்ணில் புதிய புறநானூற்றை களத்தில் கண்டோம். போரில் புற முதுகு காட்டாமல் எதிரியை நேருக்கு நேர் சந்தித்த வீரத்தை எமது மண்ணில் நீண்ட காலத்திற்குப் பின்பு எமது மக்கள் நேரில் கண்டு போர்ப்பரணி பாடியதையும் பார்த்திருக்கின்றோம். உலகில் தமிழன் வாழும்வரை இந்த வரலாறும் எமது தலைவர் பிரபாகரன் பெயரும் என்றும் அழியாது.

மேஜர் கலாநிதி அவர்களின் போராட்டப் பயணம் போராளிகளின் வீரம் செறிந்த விடுதலைப் போருக்கு இலக்கணமாக அமைந்திருந்தன. கடலிலும் தரையிலும் சாதிக்கும் திறனை விடுதலைப்புலிகள் இயக்கம் அவளுக்கும், அவள் போன்ற பல போராளிகளுக்கும் பெற்றுக்கொடுத்திருந்தது. அடுக்கடுக்காகப் பெண்களின் வீரம் பெரும் சாதனைகளை விடுதலை இயக்கத்திற்கு பெற்றுக்கொடுத்த வண்ணம் தொடர்ந்தபோது, முதல் கடற் கரும்புலி அங்கயற்கண்ணியின் சாதனை தமிழ் வீரப் பெண் குலத்திற்கு பெருமை சேர்த்த விடுதலை வரலாறு ஒன்றை உருவாக்கியது. என்றும் எங்கும் கண்டிராத போர்க்கவியமொன்றை எமது தாய் மண்ணில் எமது தமிழ்ப்பெண்கள் எழுதிக்கொண்டிருப்பதை ஒவ்வொரு தாக்குதல்களிலும் எம்மால் அவதானிக்க முடிந்தது.

வரலாற்றை எம்மால் படிக்கின்றபோது, வரலாற்றோடு வாழ்ந்த காவிய நாயகர்களைப்பற்றியும், அவர்களின் தற்கொடை பற்றியும் நாம் அறிந்திருப்பதும் அவற்றை எமது பரம்பரைக்கு சொல்லிக்கொடுப்பதும், காலத்தின் கடமையாகும். இவ்வாறு தனது இளமைக்காலத்தை இனத்தின் விடுதலைக்கு அர்பணித்த மேஜர் கலாநிதி போன்ற வீராங்கனைகளை எமது தாய்மண் என்றும் மறக்காது.

ஓயாத அலைகள் 2 தாக்குதல் நடவடிக்கையை விடுதலைப் புலிகள் 1998ம் ஆண்டு மேற்கொண்டனர். "ஜயசிக்குறு" இராணுவ ஆக்கிரமிப்பை சிங்கள அரசு மேற் கொண்டிருந்த காலப்பகுதியில் ஓயாத அலைகள் 2 யும் மேற்கொள்ளப்பட்டன. கிளிநொச்சி நகரில் நிலை கொண்டிருந்த சிங்களப் படைத்தள மீதான தாக்குதலில் விடுதலைப்புலிகள் இயக்கத்தின் படையணிகள் பங்கெடுத்தன.

இதற்காக கடல் புலிகள் அணியிலிருந்தும் ஓர் சிறப்பு அணி ஒழுங்கு செய்பாட்டு மேஜர் கலாநிதி அவர்களின் தலைமையிலான தாக்குதல் அணி தங்களது பணியைச் சிறப்பாகச் செய்தபோது, ஏனைய படையணிகளின் தாக்குதலாலும் நிலைகுலைந்த சிங்களப் படை ஆனையிறவு நோக்கி தப்பியோடியது. ஆனையிறவு, பரந்தன் படைமுகாம்களிலிருந்து வெளியேறி உதவிக்கு வந்த இராணுவத்தினரை லெப் கேணல் ஜீவன், லெப் கேணல் நாகேஷ் ஆகியோர் தலைமையிலான ஜெயந்தன் படையணியினர் தடுத்து நிறுத்தி போரிட்டனர்.

இதற்கு ஈடுகொடுக்க முடியாத சிங்களப்படை உதவிக்குச் செல்லமுடியாத நிலை ஏற்பட்டபோது, கிளிநொச்சியிலிருந்து தப்பியோடும் முடிவை சிங்களப்படை எடுத்திருந்தது. கிளிநொச்சி படைத்தள விழ்ச்சியைத் தொடர்ந்து விடுதலைப்புலிகளின் கட்டுப்பாட்டில் கொண்டுவரப்பட்டன.

ஒவ்வொரு தாக்குதல்களிலும் ஆண்போராளிகளுக்கு நிகராக சமராடிய பெண்புலிகளின் சாதனை தமிழ்ப் பெண்குலத்தை பெருமைகொள்ளவைத்தன. மும்தா வலம்புரி கப்பல் தாக்குதல், காங்கேசன்துறை துறைமுகத்தாக்குதல், முல்லைத்தீவு கடற் பரப்பில் டோரா தாக்குதல், திருகோணமலை துறைமுகத் தாக்குதல்,என்பனவற்றிலும் மேஜர் கலாநிதியின் வீரம் தாக்குதல் மூலம் உணர்த்தப்பட்டன.

விடுதலைப்புலிகளின் கப்பல்களில் பணிபுரிந்த போராளிகளில் முதல் கப்பல் கப்டன் தரம் வழங்கப்பட்ட கடற்கரும்புலி லெப் கேணல் சிலம்பரசன் அவர்களின் சொந்த ஊரும், ஆழியவளைதான் என்பதில் அந்த ஊரில் தன்மானமிக்க தமிழ்மறவர்கள் வாழ்ந்த, வாழ்கின்ற ஊராக எம்மால் பார்ப்பதற்கு சிலம்பரசன், கலாநிதி போன்ற மாவீரர்களின் வரலாறுகள் சான்று பகர்கின்றன. தேசியத் தலைவர் அவர்களினால் இனங்காணப்பட்ட போராளிகளில் சிலம்பரசன் அவர்களும் ஒருவராவர். இவர் கடலில் விடுதலைப்புலிகளின் கப்பல் தாக்கப்பட்ட நிகழ்வில் வீரச்சாவடைந்தார்.

கிளிநொச்சிப் படைத்தள விழ்ச்சியைத் தொடர்ந்து, சிங்களப்படையின் "ஜெயசிக்குறு" நடவடிக்கை மாங்குளம் நோக்கி முன்னேற ஆரம்பித்தன. போராளிகளின் அதிரடி தாக்குதல்களால் திக்குத்திணறிய சிங்களப்படைத் தளபதிகள் தங்கள் படை வீரர்களை உற்சாகப்படுத்தும் நிலையில் முன்னேற்ற முயற்சியை மேற்கொண்டனர். கிளிநொச்சி படைத்தளத் தாக்கியழிப்பில் ஈடுபட்ட போராளிகளின் படையணிகள் மாங்குளம் நோக்கி அனுப்பி வைக்கப்பட்டபோது, மேஜர் கலாநிதியின் அணியும் இணைக்கப்பட்டன.

சிங்கள இராணுவத்தினரை கனகராயன் குளத்தில் தடுத்து நிறுத்தும் தாக்குதலை விடுதலைப் புலிகள் மேற்கொண்டபோது மேஜர் கலாநிதியின் அணியும் பெரும்சமரில் ஈடுபட்டது. விடுதலைப்புலிகள் இயக்கத்தைப் பொறுத்த வரையில் களத்தில் தலைமை தாங்கும் தளபதிகள் முன்னேறித் தாக்கும்பணியில் என்றும் பின்னிற்பதில்லை. இது விடுதலைப் புலிகளில் போரியல் வரலாற்றில் பதியப்பட்ட ஒன்றாகும்.

களத்தில் பாய்ந்து சென்று எதிரியைத் தாக்கும் தளபதிகள் வரிசையில் மேஜர் கலாநிதியும் தனது அணிக்கு கட்டளைகளைப் பிறப்பித்த வண்ணம் உக்கிர சமராடினாள். இந்த நிகழ்வில் எதிரியின் எறிகணைத் தாக்குதலில் 1998ம் ஆண்டு 10ம் மாதம் 6ம் நாள் தமிழீழத் தாய் மண்ணில் தனது பணியை நிறைவு செய்து கனகராயன்குள மண்ணில் தனது இரத்தத்தைச் சிந்தி கடமையை முடித்து கண் மூடினாள்.

இழப்புக்கள் ஈடுசெய்ய முடியாதவொன்றாகும். ஆனால் மேஜர் கலாநிதி, தனது இழப்புக்கேற்ற விதத்தில் எண்ணற்ற வீராங்கனைகளை தாய் மண்ணின் விடுதலைக்காக வளர்த்தெடுத்திருந்தாள். ஒரு அன்பான அன்னையைப் போன்று தம்மை வழிநடத்திய தளபதியை இழந்த சோகத்தில் திளைத்திருந்த போராளிகள் அவளின் வளர்ப்பு, போராட்டப்பணி, தலைவர் மீது கொண்டபற்று, மண்ணின் விடுதலை என்பன ஒருங்கே சேர, உணர்வுடன், உறுதியுடன் நெஞ்சினில் மேஜர் கலாநிதியின் நினைவுகளை ஏந்தி போராட்டப் பயணத்தில் தொடர்ந்தனர்.

என்றும் மேஜர் கலாநிதி உணர்வுள்ள ஒவ்வொரு தமிழரின் நெஞ்சினில் உறைந்திருப்பாள். குடும்பம், ஊர், வட்டம் என்ற வகைக்குள்ளும் இவளின் நினைவுகள், போராட்ட இலட்சியம் புனிதப் பயணம் என்பன உறங்கிக் கிடந்தாலும், அழியாமல், மங்காமல் மறையாமல் தொடரும்.

எழுகதிர்.

# 26 வருடங்கள் அயராது உழைத்த வீரத்தளபதி பிரிகேடியர் சொர்ணம்!

திருகோணமலை எப்பொழுதும் அலை எழுந்து ஆர்ப்பரிக்கும் ஒரு அழகிய நகரம். தமிழினத்தின் தலை நகரம் என்னும் சிறப்பை பெற்று நிமிர்ந்து நிற்கிறது.

இந்தத் தலை நகரந்தான் தமிழீழ விடுதலைப் போராட்டத்திற்கு ஈடிணையற்ற போராளிகளை உவந்தளித்தது. மானிப்பாயில் பிறந்த பொழுதும் திருமலை அரசடி வாழைத் தோட்டம் என்னும் ஊர்தான் இவரை சிறு பராயத்தில் இருந்து மாபெரும் வீரனாக வீரத்தை ஊட்டி வளர்த்த மண்.

தந்தை ஜோசப்புக்கும் தாய் திரேசம்மா (பரிபூரணம்) அவர்களுக்கும் மகனாக பிறந்தவன் தான் பிரிகேடியர் சொர்ணம். இவனது இயற்பெயர் அன்ரனிதாஸ். இவன் இளைமைக் காலத்திலேயே குறும்புத்தனம் மிக்கவனாகவும் உயர்ந்த கம்பீரமிக்க தோற்றமுடைய ஆற்றல் மிக்க சிறுவனாக வளர்ந்து வந்தான்.

பாடசாலையிலும் திறமையுடன் படித்து உயர்தரம் வரை சென்றான். உடற் பயிச்சியிலும், தற்காப்புக் கலையிலும் சிறப்புறச் செயற்பட்டு சிறந்த மாணவனாக திகழ்ந்தான். மாணவப் பருவத்தில் பொதுப் பணிகள், வேலைகள் என்றால் இவன் தான் முன்னிப்பான்.

இக்கால கட்டத்தில்தான் தமிழர்கள் வாழ்ந்த மண்ணை சிங்களவர் சிங்கள பூமியாக்க மும்முரமாக ஈடுபட்டிருந்த வேளையில் தமிழர்களுக்கு எங்கும் எதிலும் அநீதி, படுகொலைகள்இ கற்பழிப்புக்கள் இதைக் கண்டு சிறுவயதிலே கொதித்தெழுந்தான்.

திருகோணமலை புனித சூசையப்பர் கல்லூரியில் உயர்தரம் பயின்றுகொண்டிருந்த வேளையில் சிங்கள இராணுவத்தினரும் இனவாதிகளினதும் கொடூரங்களைக் கண்டு இவ் அநீதியை தட்டிக்க கேட்க வேண்டும் என்றால் போராடித்தான் ஆகா வேண்டும் என்று தன்னை போராட்டத்தில் இணைத்துக் கொள்ள விரும்பினான் அக்காலகட்டத்தில் பல்வேறு இயக்கங்கள் பல்வேறு வழிகளில் போராடிக் கொண்டிருந்தன. அதில் சரியான பாதையை தேர்தெடுப்பது என்பது அக்கால கட்டத்தில் மிகவும் சிக்கலான விடயம்.

ஆனால் தனது இலட்சிய போராட்டத்திற்கு சரியானது விடுதலைப் புலிகள் இயக்கம் தான் என்று *12.09.1983*ல் தன்னை விடுதலைப் போராட்டத்தில் இணைத்துக் கொள்கிறான். எமது தேசியத் தலைவரின் செயற்பாட்டிற்கு ஊடாகச் சரியானதோர் முடிவெடுத்து எமது போராட்டத்தின் அத்திவாரக்கற்களாக திகழ்ந்த மூத்த தளபதிகளில் இவனும் ஒருவனாக நின்று போராட்டத்தை வளர்த்தெடுத்தான்.



சொர்ணம் என்ற பெயருடன் சமர்ப்புலி வளரத் தொடங்கியது. பயிற்சிக்காலங்களில் திறம்படச் செயற்பட்ட இவன் யாழ்ப்பாணம், முல்லைத்தீவு, கிளிநொச்சி, திருகோணமலை, மட்டக்களப்பு, மணலாறு மாவட்டங்களிலும் அதன் காடுகளிலும் எதிரியை திணறடித்தவன் இவ் மாவட்டங்களில் பெரும் காடுகளுக் கூடாக நீண்ட நடை பயணத்தை சோர்வின்றி மேற்கொண்டு போராட்ட பணிகளை திறம்படச் செயற் படுத்தினான்.

வேவு அணி, பதுங்கித்தாக்கும் அணி, விநியோக அணி, வழிகாட்டிகள் என காட்டிற்குள் பல அணிகளை உருவாக்கி கிழக்கு மாகாணத்தில் எதிரியின் தடைகளை எல்லாம் சவாலாக ஏற்று எதிர்த்து நின்று போராடி சாதனைகள் படைத்தவன்.

இவனது போரிடும் ஆற்றலையும் முடிவெடுக்கும் தன்மையையும் தமிழீழத் தேசியத் தலைவர் அவர்கள் இனங்கண்டு இதற்கமைவாக தலைவர் அவர்களால் கொடுக்கப்படும் கட்டளைகளுக்கு செயல்வடிவம் கொடுத்துக்காட்டிய கட்டளைத் தளபதியாகத் திகழ்ந்தான். “சொர்ணம் கதைக்கிறான் என்றாலே சிங்கள இராணுவத்திற்கு கதிகலங்கும்” அந்த அளவுக்கு தனது போரிடும் ஆற்றலை வளர்த்துக்கொண்டவன்.

இவ்வாறு இவன் வெற்றிவாகை சூடிய சமர்க்களங்களே அதிகம் ஆகாயக் கடல் வெளிச்சமர், மாங்குளம், தவளைப் பாய்ச்சல், மண்டைதீவு, மண்கிண்டி மலை, இதய பூமி, புலிப்பாய்ச்சல். சூரியக் கதிர், ஓயாத அலைகள் எனப் பல வெற்றிச் சமர்களை எல்லாம் வழிநடத்திய சமரக்களத் தளபதிகளில் இவனும் ஒருவனாகத் திகழ்ந்தான். இவன் படை ஒழுங்கு படுத்தும் சிறப்பை “புலிப்பாய்ச்சல்” நடவடிக்கையில் கண்டு வியப்படைந்தோம்.

ஜெயசிக்குறு படையினர் மீது திட்டமிட்ட தாக்குதல் மேற்கொள்ள பலமுறை தேசி யத் தலைவரிடம் அனுமதி கேட்ட

15ம் பக்கம் பார்க்க

1ம் பக்கத் தொடர்ச்சி

வன்னிப்பகுதியில் மட்டுமே வெளிவந் திருந்த இப்பத்திரிகை தொடர்ந்து தமிழ்மக்களின் நெருக்கடி நிலை வாய்ந்த சூழல்களை தாங்கி வெளி வந்திருந்தது.

இறுதி யுத்தத்தின் கோரப்பிடியில் வன்னியில் பெரும்பாலான நிலங்கள் ஆக்கிரமிப்பட்ட பின்னர் கிளிநொச்சியை அண்டிய பிரதேசங்களை


ஈழநாதம்
மக்கள் நாளிதழ்

யும் சிறிலங்கா படையினர் ஆக்கிரமித்திருந்த நிலையில் கிளிநொச்சி நகரையும் அதனை அண்டிய பிரதேசங்களிலும் எறிகணை மற்றும் பலத்த விமானத்தாக்குதல்களை மேற்கொண்டிருந் தனர்.

இந்நிலையில் கிளிநொச்சியில் இருந்து ஒக்டோபர் 2008 முற்பகுதியில் தருமபுரம் பகு திக்கு இடம்பெய்ந்து தற்காலிகமாக இயங்கி வந்தது.

பின்னர் தருமபுரம் பகுதியில் இருந்து தை மாதம் உடையார்கட்டு பகுதியில் இயங்கி வந்தது. பின்னர் சுதந்திரபுரம் பகுதியிலும் பெப்ரவரி 10 ஆம் திகதி தேவிபுரம் பகுதியில் இயங்கியது. தேவிபுரம் பகுதியில் ஒரே ஒரு நாள் மட்டுமே ஈழநாதம் பத்திரிகை வெளிவந்திருந்தது.

தேவிபுரம் பகுதியில் இருந்து அச்சுஇயந்தி ரங்கள் மற்றும் தளபாடங்கள் படையினரின் பல த்த எறிகணைத்தாக்குதலில் சேதமடைந் திருந்த நிலையில் மிக்குறைந்த பணியாளர்களின் ஒத்துழைப்போடு இரணைப்பாலைப்பகுதியில் இடம் பெயர்ந்து சென்றது. ஆனால் அங்கு பத்திரிகை அச்சிடுவதற்கான எந்தவித சாத்தியங்கள் இல்லாத அளவுக்கு அச்சு இயந்திரங்கள் மோசமாக சேதமடைந்திருந்தது.

இந்நேரத்தில் ஈழநாதம் பத்திரி கை இயந்திரங்கள் முற்றாக சேதமடைந்திருந்த நிலையில் இயந்திர இயக்குனர் சுகந்தன் என்பரின் முயற்சியினால் பிளேட் மேக்கர் என்ற இயந்திரம் திருத்தம் செய்யப்பட்டிருந்தது.

நிறுவனம் ஒன்றின் உதவியுடன் அச்சு இயந்திரங்கள் வாகனம் ஒன்றில் ஏற்றப்பட்டு நகரும் பத்திரிகை நிறுவனமாக செயற்பட்டி ருந்தது. இலங் கையில் முதலாவது நகரும் பத்திரிகை நிறுவனம் ஒன்று சொன்னாலே மிகையாகாது. ஏறிகணைகள் மிக அருகில் விழுகின்ற சமயம் அதனை பிறிதொரு இடத்திற்கு நகர்த்துவதற்கு 24 மணிநேரமும் பணியில் ஈடுபட்டவர்கள் தான் அன்ரனி (அன்ரனிக்குமார்), தர்சன் ஆகியோர். இவர்கள் இருவரும் வாகனத்தினை பிறிதொரு இடங்களுக்கு நகர்த்து வதில் கைதேர்ந்தவர்கள். இவர்கள் இன்று உயிருடன் இல்லையென்பதற்காக மிகைப்படுத்தி யதாக யாரும் எண்ண வேண்டாம். உண்மையில் இவர்களின் துணிச்சலான இப்பணியினை ஏனைய ஊடகவியளாலர்கள் கூட வியந்திருக் கின்றார்கள்.

பின்னர் இரணைப்பாலைப்பகுதியில் இடம் பெற்ற கிபிர் விமானத்தாக்கு தலினை அடுத்து தொடர்ந்து 20 ஆம் திகதியே மீண்டும் இரணைப்பாலைக்கும் புதுமாத்தளன் பகுதிக்கும் இடையில் உள்ள பிரதேசத்தில் இயங்கியது.

வாகனம் அச்சுஇயந்திரங்களை சுமந்து நகருவதற்கு தயார் நிலையில் இருக்கின்றது. மின்பிறப் பாக்கி தனது வேலையை சரியாகச் செய்துகொண்டிருக்கிறது.

காலை 5.30 மணி பத்திரிகைக்கான அனைத்து செய்திகளும் கணினியில் பக்கங்களாக ஆக்கப்பட்டு பிரதான கணினி-யினை ஒரு பணியாளர் உந்துருளியில் சுமந்து வருகிறார். இன்னொரு பணியாளர் ஏ-3 என்ற லேசர் பிரிண்டரினை சுமந்து வரு கிறார். வைப்பதற்கு மேசைகள் இருக்கவில்லை. நிலத் தில் சாறம் ஒன்று விரிக்கப்படுகிறது. அதில் பிரதான கணினி பிரிண்டர் வைக்கப்பட்டு கணினிக்கும் பிரிண்டருக்கும் இணைப்பு ஏற்படுத்தப்படுகிறது.

அவ்வீதியின் கரையால் மக்கள் சாரை சாரையாக செல்கிறார்கள். சிலர் வியந்து பார்க்கின்றார்கள். சிலர் இவங்களுக்கு தேவை இல்லாத வேலை என்று முணுமுணுக்கிறார்கள். அச்சு வாகனத்தில் அருகில் இடம்பெயர்ந்து வசித்து வந்த குடுபத்தினர் தேநீர் கொடுக் கின்றார்கள்.

அச்சுடுவதற்கான பிரிண்ட் எடுக் கப்பட்ட 15 நிமிடங்களில் அச்சு பதிப்பிற்காக தயார்நிலையில் அச்சு இயந்திரம் தயாராகின்றது. வுாகனத்தில் சுதந்தன், தர்சன் இருவரும் தங்களது வேகத்தை அதிகரிக்கின்றார்கள்.

அன்றையநாள் பத்திரிகையை தன் நால முடிந்த அளவுக்கு இயந்திரம் அடித்துக் கொண்டிருக்கின்றது.

சில மீற்றர் தூரத்தில் திடீரென எறிகணைகள் விழுகிறது. அதற்கு பின்னரான சில நிமிடங்களில் வானில் ஒரு எறிகணை வெடிக்கின்றது. அதி லிருந்து சிதறிய குண்டுகள் வீழ்ந்து வெடிக்கி றது. கத்தல் கதறல் என ஓடுவோர், என அல்லோல கல்லோலம். பலர் இருந்தவர்கள் அனைவரும் பாதுகாப்பிற்கு படுத்திருந்தார்கள்.

பலரின் முதுதுப்பக்கம் முள் கரண்டியால் கிண்டிய போன்று காணப்பட்டது.

இது அன்றைய நாளில் நடந்த மிகச்சுருக்க மான காட்சியாகும்.

அடுத்த நாள் பத்திரிகை வாகனம் அதே பகுதியில் 400 மீற்றர் தாண்டி தரித்து நின்றது.

வெறும்மணல் நிலத்தில் இருந்துகொண்டே கணனிகளை இயக்கவேண்டிய நிலையிலும் இப்பத்திரிகையின் வெளிவருவதற்கு உறுதுணை யாக ஜெயராசா சுசிபரன் (சுகந்தன்), நல்லையா மகேஸ்வரன், மரி அருளப்பன் அன்ரனிகுமார் (அன்ரனி), சங்கரசிவம் சிவதர்சன்(தர்சன்), சசி-மதன், மரியநாயகம் அன்ரன் பெனடிக்(அன்ரன்) உள்ளிட்ட மிகக்குறைந்தளவான பணியாளர்களின் முயற்சியில் தொடர்ந்து வெளிவந் திருந்தது.

சிறிலங்கா படையினர் கொடூரங்க முன்னேறி


04 ஈழநாதம் 11-03-2009
வன்னியில் கடும் மழை இடம்பெயர்ந்தோர் பேரவலம்
படையினர் அகோர எறிகணைவீச்சு 124 பொதுமக்கள் படுகொலை

வரும் நிலையில் அதே புதுமாத்தளன் பகுதியில் சிலநாட்களும் பொக்கனைக்கும் வலைஞர்மடத் திற்கும் இடைப்பட்ட வெளிப்பிரதேசத்தில் சிலநாட்களும் இயங்கிவந்தது.

இக்காலப்பகுதியில் தான் வற்றாப்பளை முள்ளிய வளையைச் சேர்ந்த சந்திரசேகரம் சசிமதன் எறிகணைத்தாக்குதலில் கொல்லப் பட்டார். இவர் முல்லைத்தீவு பத்திரிகை விநி யோகஸ்தராக கடமைபுரிந்து வந்தவர்.

இதே காலப்பகுதியில் ஈழநாதம் கணினி பக்கவடிவமைப்பாளர் மேரி டென்சி மற்றும் அவரது கணவரும் பொக்கணைப்பகுதியில் இடம்பெற்ற எறிகணைத்தாக்குதலில் . கொல்லப்பட்டனர்.

பின்னர் முல்லைத்தீவு பத்திரிகை விநியோ கஸ்தராக கடமைபுரிந்த மரியநாயகம் அன்ரன் பெனடிக் (அன்ரன்) என்பவர் உந்துருளியில் சென்று கொண்டிருக்கும் போது எறிகணைத் தாக்குதலில் கொல்லப் பட்டார்.

கில நாட்களில் புதுக்குடியிருப்பு ஈழநாதம் விளம்பரப்பணிமனையின் முகாமையாளர் நல்லையா மகேஸ் வரன் எறிகணைத்தாக்குதலில் கொல் லப்பட்டார்.

பொக்கணை, வலைஞர்மடம் வெளிப்பகுதி யில் வீதிக்கரையில் இருந்த மரத்தின் கீழேயே விளம்பரப்பணிமனை அமைந்திருந்தது. விளம்பரப்பணிமனை என்றால் யாரும் முன்னைய இடங்களில் இருப்பது என்று யோசிக்கதேவை யில்லை. பெயர்பலகையோடு ஒரு கதிரை இருக்கும். அதில் நல்லையா மகேஸ்வரன் இருப்பார். அவ்விடத்திலேயே பத்திரிகைக்கான விளம்பரங்களை வழங்கமுடியும்.

அன்றைய நாள் மாலை அனைத்து விளம்பரங்களை சேகரித்து விட்டு சேகரித்த விளம்பரங்களை ஈழநாதம் அச்சுஇயந்திரம் இருக்கும் பகுதிக்கு சென்று அனைத்து விளம்பரங்களையும் ஒப்படைத்து விட்டு தனது பணியினை நிறைவு செய்து விட்ட பச்சைபுல் மோட்டையிலஉள்ள தனது உறவினர் வீட்டிற்கு சென்றிருந்தார். அவரது குடும்பத்தினர் யாழ்ப் பாணத்தில் வசித்திருந்தபடியால் தனது உறவி-னர் வீட்டிலேயே இவர் தங்குவது வழமை.

ஆவர் போய் ஒரு மணித்தியாலத்தின் பின் அவரது உறவினர் ஒருவர் மகேஸ்வரன் கொல லப்பட்ட செய்தியினை தெரிவித்திருக்கின்றார். ஊடனடியாக பச்சைபுல்மோட்டைப்பகுதிக்கு சென்ற ஊடகப்பணியாளர்கள் அவரின் உடலை அடுத்த நாள் அடக்கம் செய்தார்கள்.

எந்தவித வசதிகளுமின்றி கையிருப்பில் இருக்கின்ற அச்சுப்பொருட்களை வைத்து நான்கு பக்கங்களில் நாளாந்தம் இப்பத்திரிகை வெளி வந்திருந்தது.

இடம்பெயர்வுகள், எறிகணைகள் தாக்குதல் கள், விமானத்தாக்குதல்கள் என குடும்பம் குடும்பமாக இடம்பெயர்வின் சுமைகளை சுமந்த மக்களோடு ஈழநாதப்பணியாளர்கள் பலர் பணியாற்றமுடியவில்லை. இந்நேரத்தில் கணின-யில் பக்கவடிவமைப்புக்களை செய்து அச்சு இயந்திரத்தில் பத்திரிகையினை அடித்து தானே அதை விற்பனை செய்து கொண்டிருக்கும் நேரத்தில் தான் சங்கரசிவம் சிவதர்சன்(தர்சன்) என்பவர் புதுமாத்தளன் சந்தியில் படையினரின் துப்பாக்கி ரவையினால் துடைப்பகுதியில் காயமடைந்திருந்தார்.

பின்னர் இவர் குணமடைந்து ஒரு சில வாரத்தில் மீண்டும் பணிக்கு திரும்பிவிட்டார்.

2009 ஏப்பிரல் மாதத்தில் இரட்டை வாய்க்கால் பகுதியில் இயங்கிய ஈழநாதம் பத்திரிகை நி-றுவனம் தொடரும் எறிகணைத்தாக்குதல்களில் கொல்லப்பட்டவர்கள், படுகாயமடைந்தவர்கள் போன்றவர்கள் விபரங்களை தொடர்ந்து வெளியிட்டு வந்தது.

2009 ஏப்பிரல் 20 ஆம் திகதி புதுமாத்தளன், பொக்கனை பகுதி படையினரின் தாக்குதலில் 1500 க்கும் மேற்பட்ட பொதுமக்கள் கொல்லப்பட்டி ருந்தனர். இத்தாக்குதலில் படுகாயமடைந்த வர்களை மீட்கும் நடவடிக்கையில் ஈழநாதம் ஊடகப்பணியாளர்களும் ஏனைய ஊடகங்களின் பணியாளர்களும் முள்ளிவாய்க்கால் வைத்திய சாலையில் உதவி புரிந்தும் வந்துள்ளனர்.

2009ஏப்பிரல் 25 அன்று வலைஞர்மடம் பகுதி யில் செய்தி சேகரிக்சென்ற செய்தியாளர் சுரேன் கார்த்திகேசு என்பவர் படுகாயமந்துடன் ஜெயராசா சுசிபரன் என்றழைக்கப்படும் சுகந்தன் என்பவர் ஸ்தலத்திலேயே கொல்லப்பட்டார்.

இதன் பின்னர் முள்ளிவாய்க்கால் பகுதியில் இயங்கி வந்த ஈழநாதம் தனது செயற்பாட்டினை தளரவிடாது தொடர்ந்தும் வெளிவந்துகொண்டி ருந்தது.

மிகக்குறைந்த வளத்துடனும் குறைந்த பணியாளர்களுடனும் இயங்கிய இப்பத்திரிகை மேமாதம் 12 ஆம் திகதி வரைக்கும் தனது பணியினை செய்து கொண்டிருந்தது.

மே மாதம் 12 இரவு எறிகணைத்தாக்குதல்களில் கணினிகள் யாவும் முற்றாக சேதமடைந்ததோடு தனது பணியினை முன்னெடுக்கமுடியாதநி லையில் நிறுத்திக்கொண்டுவிட்டது.

அந்நாள் வரைக்கும் தங்களது பணியினை செய்து கொண்டிருந்த ஊடகப்பணியாளர்களான அன்ரனி, தர்சன் என்பவர்கள் மே மாதம் 14 ஆம் திகதி படையினரின் தாக்குதல்கள் கொல லப்பட்டுவிட்டார்கள். இறுதி யுத்தகாலப்பகுதியில் தங்களது குடும்பங்களின் சுமைகளையும் தாங்கி ஊடகப்பணியையும் செய்து தங்களது உயிரை இழந்த ஊடகப்பணியாளர்களின் குடும்பங்களுக்கு ஊடகவியளாலர்கள் அனைவரும் ஆழ்ந்த அனுதாபங்களைத் தெரிவித்துக்கொள்கின்றோம்.


ஈழநாதம்
அ'புர விமானப் படைத் தளம் மீது
கரும்புலிகள் அதிரடித் தாக்குதல்

# கொள்கைகள் உறுதியாக இருப்பின் வெற்றிகள் மாற்றப்படுவதில்லை

நம்முடைய மனதில் ஒரே ஒரு கொள்கையை வைத்துக்கொண்டால் அதன் மூலம் நமது இலக்குகளை அடைந்து நிறைய வெற்றிகளை காணலாம். ஆனால் இந்த கொள்கைள் புகழ்ச்சிக்காகவோ அரசியல் லாபத்திற்காகவோ இருப்பின் நம் வெற்றிகள் கனவிலும் காணமுடியாதவைகளாகிவிடும்.

இந்த சிறிய உதாரணத்திற்கு ஒரு பெரிய சம்பவம் தமிழகத்தில் நடைபெற்று வருகின்றது. ஈழத்தமிழர்களுக்கு மறுவாழ்வு, டெசோ, எதிர்ப்புகள், போராட்டங்கள் என அனைத்தும் தமிழகத்தில் தான் அண்மைக்காலங்களாக நடத்தப்பட்டு வருகின்றன.

கருணாநிதியோ, வைகோவோ இந்த போராட்டங்களின் மூலம் இலங்கையில் ஆட்சியை பிடிக்கப்போவதில்லை. இனி உதய சூரியன் தமிழகத்தில் மீண்டும் ஒரு முறை உதிப்பதோ, பம்பரம் சுற்றுவதோ சற்று கடினமான ஒன்றே... அப்படியிருக்கையில் ஏதாவது ஒரு போராட்டத்தை நடத்திக்கொண்டு மக்களை தன் பால் ஈர்க்க வேண்டுமென்ற நடவடிக்கைகளில் இவர்கள் ஈடுபட்டு கொண்டிருக்கின்றனர்.

ஏனெனில் இவர்களது கொள்கையில் ஒற்றுமையோ பலமோ இருந்திருந்தால் கடந்த பல வருடங்களுக்கு முன்னதாகவே தமிழீழம் இலங்கையில் மலர்ந்திருக்கும். ஏன்? இறுதிப்போர் நடக்கும் நேரத்தில் இவர்கள் ஒற்றுமையுடன் செயல்பட்டிருந்தால் இந்தியாவிலிருந்து தமிழர்களை அழிக்க ஆயுதங்கள் ஏற்றுமதி ஆகியிருக்காது. நம் தமிழ் உறவுகளை அழிவிலிருந்து காப்பாற்றியிருக்கலாம்.

ஆனால் அந்நேரத்தில் கண்துடைப்பிற்காக கருணாநிதி மத்திய அரசுக்கு கடிதங்கள் பல எழுதியதும் தெருமுனையில் மேடைகளை அமைத்துக்கொண்டு ஐ.நா சபைக்கு சவால் விட்ட வைகோவையும் மறக்க இயலாது. இவர்கள் இன்று வரை இந்த இரண்டு செயல்களையும் தான் மாற்றி மாற்றி செய்துக்கொண்டிருக்கிறார்கள்.

சரி, சமீபத்தில் ஜனாதிபதி மகிந்த ராஜபக்சவின் இந்தியா வருகைக்கு எதிர்ப்பு தெரிவித்து கருணாநிதி கருப்புச்சட்டை அணிந்தார். வைகோ வழக்கம் போல பிரதமர் வீட்டை முற்றுகையிட முயன்றார்.

அவரோ, திருப்பதிக்கு சென்று பலத்த பாதுகாப்புடன் ஏழுமலையானை தரிசனம் செய்து விட்டு தாய்நாடு திரும்பினார். இது போலத்தான் இவர்களின் போராட்டங்கள் தோல்வியுறுவதற்கு ஒரே காரணம், உறுதியான கொள்கைகள் எதுவுமில்லை.

ஏதோ தமிழர்களுக்காக வருங்காலத்தில் நாங்களும் குரல் கொடுத்தோம் என்பதை காட்டிக்கொள்வதற்காக நடத்தப்படும் கண்துடைப்பு போராட்டங்கள் என்றுமே தோல்வியை சந்திக்கும் என்பதில் ஐயமில்லை.

## 26 வருடங்கள் அயராது உழைத்த.....

போதும் கிடைக்கவில்லை. ஜெயசிக்குறு படை ஒட்டிசுட்டான் வரை முன்னேறி நிலைகொண்டிருந்த வேளையில் தேசியத் தலைவர் அவர்களால் ஒட்டிசுட்டான், நெடுங்கேணி, கருப்பட்ட முறிப்பு போன்ற படைத்தளங்கள் மீது திட்ட மிட்ட தாக்குதல் மேற்கொள்வதற்கு தளபதி சொர்ணத்திற்கும், தளபதி ஜெயம் அவர்களுக்கும் அனுமதி வழங்கப்படுகின்றது. பல வருடங்களாக ஆமை வேகத்தில் நகர்ந்து வந்த ஜெசிக்குறு இராணுவ நடவடிக்கையை மூன்று நாட்களில் பழைய நிலைக்கு வீரட்டியடித்த பெருமை இந்த வீரத்தளபதி பிரிகேடியர் சொர்ணத்தையும் சாரும்.

இம்ரான் பாண்டியன் படையணியின் முதல் தளபதியாக விளங்கிய இவன் தலைவரை பாதுகாக்கும் பணியையும் பொறுப்பேற்றான். திறம்படச் செய்த வீரத்தளபதியுடன் தலைவர் அவர்களால் வளர்த்தெடுக்கப்பட்ட சிலர் துரோகம் இழைத்த போது தலைவருக்கு அருகில் நின்று துரோகத்தை துடைத்தெறிந்தவன். தலைவர் அவர்களின் நம்பிக்கைக் குரியவர்களில் இவனும் ஒருவன்.

இக்காலகட்டத்தில்தான் திருமணம் செய்யுமாறு தலைவர் அவர்கள் கேட்டுக் கொண்டார். அதன் படி ஜெனனி என்ற போராளியைத் திருமணம் செய்து 3 பிள்ளைகளை பெற்றெடுத்தான். தனது திருமணத்திற்கு தலைவர் அவர்கள் வருவார் என்பதால் தனது இடுப்பு வேட்டிக்குள் கைத்துப்பாக்கியை வைத்திருந்தபடி தாலி கட்டினான்.



அந்தளவுக்கு தலைவர் அவர்களின் பாதுகாப்பில் என்நேரமும் விழிப்பாக இருந்து தலைவர் அவர்களை ஆழமாக நேசித்தான். எமது விடுதலைப் போராட்ட விழுமியங்களில் இருந்து என்றுமே அவன் தவறியதில்லை. எமது விடுதலை மரபையே வாழ்வாகக் கொண்டு வாழ்ந்து காட்டியவன். அதே போல் தனது போராளிகளையும் வளர்த்தெடுத்தான்.

"நான் சொர்ணமண்ணையோட நின்ற நான் என்றால்" வேறு எந்தத் தளபதிகளும் எந்தக் கேள்விகளும் இன்றி அவனுக்கு கடமை வழங்குவார்கள். அந்தளவுக்குப் போராளிகளை புடம் போட்டு வளர்த்த ஆற்றல் மிக்க தளபதியாவான். இயக்கத்தில் இக்கட்டான காலங்களில் எல்லாம் திறம்படச் செயற்பட்டு தடைகளை உடைத்தெறிந்த தளபதிகளில் இவனும் ஒருவன்.

இந்த வீரத்தளபதி கேப்பாபுலவிலும், தேவிபுரத்திலும் ஊடறுப்பு தாக்குதல்களை வழிநடத்தி நூற்றுக்கணக்கான இராணுவத்தை கொன்று சிங்கள படையை திணறடித்தான். தேவிபுர ஊடறுப்பு தாக்குதலில் விழுப்புண் அடைந்து தனது கால் இயலாத நிலையிலும் முப்படைகளையும் பொறுப்பெடுத்து இறுதிமூச்சு உள்ளவரை எதிரியோடு சண்டைபிடித்துக் காட்டிய வீரத்தளபதி. இவன் தமிழீழ விடியலுக்காகவும் தமிழ் மக்களின் சுபீட்சமான வாழ்விற்காகவும் 26 வருடங்கள் அயராது உழைத்த எமது கட்டளைத் தளபதி.

இவனது மூர்க்கமான சமரைக் கண்டு இராணுவம் கதிகலங்கியது. அதன் எதிர் தாக்குதலாக இராணுவம் பெருந்தொகையில் தமிழ் மக்களை கொன்றுகுவித்தது. மக்களுக்காகப் போரிடும் போது மக்களே இறக்கின்றார் என்ற போது இவனால் எதுவும் செய்ய முடியவில்லை.

எமது மண்ணினதும் மக்களினதும் விடிவிற்கான போராட்டத்தை நேசித்த இவனால் போராட்டத்தைக் கைவிட்டு சரணடைய முடியவில்லை. எனவே போராட்ட மரபுக்கேற்ப தனது இலட்சிய உறுதிப்பாட்டுடன் தன்னை தமிழீழ விடியலுக்காக 15. 05. 2009ம் நாள் தன்னை விதையாக்குகிறான்.